# கல்கி

KALKI
20.4.86
ரூ. 1.50

பெரியார்
மாவட்டத்தில்
கல்கி




## ஒரு
# கொத்தடிமைக் காலனி

கொத்தடிமைகளாவது ஒன்றாவது; அதெல்லாம் தமிழகத்தில் கிடையவே கிடையாது'' என்று அடித்துக் கூறியது தமிழக அரசு. எப்போது?

இந்திரா காந்தி காலத்தில் இருபது அம்சத் திட்டத்தின் கீழ் கொத்தடிமை ஒழிப்பு தொடர்பாகத் தமிழக அரசிடம் மத்திய அரசு விவரம் கேட்டபோதுதான் அப்படிக் கூறியது தமிழக அரசு.

ஆனால் 84ம் ஆண்டில் ஸ்ரீவில்லிபுத்தூர் பக்கத்தில் சில கொத்தடிமைகள், Solo என்ற அறக் கட்டளையாலும் அ.இ.அ.தி.மு.க. எம்.எல்.ஏ. தாமரைக்கனியின் முயற்சியாலும் விடுவிக்கப் பட்டனர்.

இதன் பிறகும் புனர்வாழ்வுத் துறை அமைச்சர் அருணாசலம், ''தமிழகத்தில் கொத்தடிமைகளே இல்லை'' என்றுதான் ஒரு பேட்டியில் குறிப்பிட்டார்.

எந்த ஈழத் தமிழருக்காகக் கண்ணீர் விடுவதாக நாம் காட்டிக்கொள்கிறோமோ அதே ஈழ அகதிகள் கொடைக்கானல் பகுதியில் கொத்தடிமைகளாக நடத்தப் பட்டு, சொல்லொணாத் துன்பங்களுக்கு உட்படுத்தப்படுகிறார்கள் என்று சுப்ரீம் கோர்ட் கருதி, தமிழக அரசுக்குச் சில கட்டளைகளைப் பிறப்பித்ததுடன், தனது பிரதிநிதியாக ஒருவரையும் நியமித்து நிலைமையைக் கண்காணிக்கச் சொல்லியிருக்கிறது. இம்மாதம் 4ம் தேதி வழங்கப்பட்ட தீர்ப்பு இது. இதைவிடத் தமிழக அரசுக்குத் தலைகுனிவு வேறென்ன வேண்டும்?

இந்தத் தீர்ப்புக்குப் பிறகும் 'தமிழகத்தில் கொத்தடிமைகளே இல்லை' என்றுதான் அமைச்சர்கள் சத்தியம் செய்வார்களோ என்னவோ! ஒரு பொய் திரும்பத் திரும்பக் கூறப் படுவதாலேயே மெய்யாகிவிடாது என்பதற்கு மற்றுமொரு உதாரணம் பெரியார் மாவட்டத்திலுள்ள செல்லிய கவுண்டனூர் என்னும் கிராமம்!

ஈரோட்டிலிருந்து மேட்டூர் செல்லும் மெயின் ரோடிலுள்ள அம்மாப் பேட்டையிலிருந்து பிரியும் சுமா



# இதோ ஒரு கொத்தடிமைக் காலனி

* செம்பன் * கண்ணப்பன்



ரான தார் ரோடில் சென்று, பிறகு அதிலிருந்து பிரியும் மண்பாதையில் சுமார் ஒரு கி.மீட்டர் நடந்தால் இந்தக் கிராமத்தை அடையலாம். மண்பாதையில் நுழையும் போதே புளிச்சென்று நம் கண்ணுக்குத் தெரிவது, சுடுகாடும், அதையொட்டிக் குடிசைகளும், குட்டிச் சுவர்களுமாய்த் தெரியும் செல்லிய கவுண்டனூர் ஹரிஜனக் குடியிருப்பும் வறண்டு கிடக்கும் தண்ணீர்க் குழாயும்தான்!

கூரையில்லாமல் நிற்கும் குட்டிச் சுவர்களுக்கு என்ன காரணம்? எங்களை அங்கு அழைத்துச் சென்ற பக்கத்து ஊர்க்காரரான ஈஸ்வரன் சொன்னார்: "சென்ற ஆண்டு எதிர்பாராதவிதமாக நடந்த ஒரு தீ விபத்தில் சாம்பலாகிப் போன குடிசைகளின் சுவர்கள்தான் அவை. விபத்து நடந்தவுடன் மாவட்ட கலெக்டர் வந்து பார்வையிட்டுவிட்டு உடனடியாக அனைவருக்கும் தீப்பிடிக்காத அளவுக்கு ஓட்டு வீடுகள் கட்டித் தருவதாக வாக்குறுதி அளித்தார். ஆனால் இதுவரை அதற்கான அறிகுறிகள் கூடத் தெரியவில்லை. இருந்தும் பக்கத்திலுள்ள ஊஞ்சப்பாளையத்தில் வசிக்கும் ஹரிஜனங்களுக்கு மட்டும் அவர்கள் குடியிருந்த குடிசைகளை இடித்துத் தள்ளிவிட்டுப் புது வீடுகளைக் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். காரணம், அது பஸ் போகும் பாதையோரத்தில் அமைந்துள்ளது. அதனால் அது போவோர் வருவோர் கண்களில் பட்டு அரசின் சாதனைகளுக்கான விளம்பரமாக இருக்கும் என்பதுதான். ஆனால் இது அப்படியில்லை. பஸ் போகும் பாதையை விட்டு விலகியார் கண்ணிலும் படாமல் இருப்பதால் விளம்பரத்துக்கு உதவாது. அதனால்தான் யாரும் கண்டு கொள்ளவில்லை என்று நினைக்கிறேன்...." என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே எங்கள் டூரிஸ்ட் டாக்ஸி அந்தச் சாலையில்கூட அதிசயமாகப் பங்க்சராகாமல் ஹரிஜனக் குடியிருப்பை அடைந்தது.

காரிலிருந்து நாங்கள் இறங்கியதைக் கண்டதும், ஏதோ தங்கள் எரிந்து போன வீடுகளைக் கட்டிக் கொடுப்பதற்கும், வீட்டு மனைகளுக்குப் பட்டாக் கொடுப்பதற்கும் தான் அரசாங்க அதிகாரிகள் தங்களைத் தேடி வந்திருப்பதாகச் சந்தோஷப்பட்டுக் கொண்டு, அங்கிருந்த அத்தனை ஹரிஜனங்களும் தங்கள் கைவேலைகளையெல்லாம்கூட அப்படியப்படியே போட்டுவிட்டுக் குழந்தை குட்டிகளோடு ஓடி வந்து எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"சாமீ..... நீங்க போன வருஷம் வீடு எரிஞ்சப்போ குடுத்த முந்நூறு ரூவா புத்தலே சாமீ! அதுக்குப் பனை ஓலை கூட வாங்க முடியலே. அப்புறம் எங்கே செவரு எழுப்பறது சாமி? பக்கத்திலே ஊஞ்சப்பாளையத்துச் சனங்களுக்குக் கூடக் கட்டிக் குடுத்துட்டீங்களே, எங்களுக்கு எப்ப சாமீ கட்டிக் குடுக்கப் போறீங்க?" என்று ஒவ்வொருவரும் கேட்க ஆரம்பித்துவிட்டார்கள்.

"நாங்கள் வெறும் பத்திரிகைக்காரர்கள் தான். உங்களுக்கு எங்களால் வீடு கட்டித் தர முடியாது. உங்கள் கஷ்டங்களை எழுதித் தெரியப்படுத்துவதற்காகத்தான் வந்திருக்கிறோம்...." என்று எத்தனை முறை எடுத்துச் சொல்லியும் அவர்கள் நம்பவில்லை.

"நீங்க கவர்மெண்ட் ஆபீசருங்கதான் எசமான். ஏனுங்க எசமான் பொய் சொல்றீங்க? எங்களுக்கா தெரியாது?" என்று ஒரு கயிற்றுக் கட்டிலை எடுத்துப்போட்டு எங்களை உட்காரச் சொல்லிவிட்டு, மிக மிக பவ்வியமாய்க் கைகளைக் கட்டிக் கொண்டு நின்றார், அண்மையில் நடந்த பஞ்சாயத்துத் தேர்தலில் அந்தக் காலனியின் வார்டு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் செம்பன் என்ற ஹரிஜன்.

சரி, இனிமேல் நாம் என்னதான் உண்மையைச் சொல்லி அறிமுகப்படுத்திக் கொண்டாலும் அவர்கள் நம்பப் போவதில்லை என்று தீர்மானித்த நாங்களும் அந்தக் கட்டிலில் உட்கார்ந்தோம். பக்கத்தில் ஓர் அடிமையைப் போல் கையைக் கட்டிக் கொண்டு நின்றிருந்த செம்பனையும் கட்டிலில் உட்காரச் சொன்னோம்.

"எசமானுங்க பக்கத்திலே போய் நான் உட்கார்றதுங்களா? தப்புங்க....." என்று மறுத்த அவரைக் கையைப் பிடித்து உட்கார வைத்தபோது அவர் உண்மையிலேயே அதிர்ச்சியடைந்துவிட்டார். அதோடு அந்த ஹரிஜனங்களையெல்லாம் நாங்கள் ஒருமையில் அழைக்காமல், 'நீங்க, வாங்க' என்று பன்மையில் மரியாதையாக அழைத்தபோது, அவர்கள் அத்தனை பேரும் அதிர்ச்சியில் மயங்கி விழாத குறைதான்!

"அப்போ நீங்க கவர்மெண்ட் ஆபீசருங்க இல்லியா எசமான்? அவங்கன்னா எங்களை இப்படியெல்லாம் கூப்பிடமாட்டாங்களே.... எங்களைக் கையைப் பிடிச்சுத் தொட்டுப் பக்கத்தில் உட்காரச் சொல்லமாட்டாங்களே....



* குள்ளாயி * வறண்டு கிடக்கும் அடி குழாய்...

நெசமாவே நீங்க பேப்பருக்காரங்கதானு எசமான்?'' என்று அடித் தொண்டையில் கேட்டார் செம்பன்.

''ஆமாம்!'' என்ற நாங்கள் ஒவ்வொருவ ராக விசாரிக்க ஆரம்பித்தோம்.

''எங்க காலனியிலே மொத்தம் தொண்ணூத்தஞ்சு வீடுங்க சாமி. அதுலே போன பங்குனியிலே அறுவது வீடுங்க எரிஞ்சு போச்சு. அப்போ உடனே கலெக்டரு வந்து பார்த்துட்டு, குடும்பத்துக்கு முந்நூறு ரூவாயும், அஞ்சு கிலோ அரிசியும், வேட்டி,சேலையும் குடுத்தாங்க. எல்லாத்தையும் தீக்குக் குடுத்துட்டு நிக்கற எங்களுக்கு அது போதுங்களா? கேட்டதுக்கு சீக்கிரத்துலே எல்லாத்துக்கும் ஊடு கட்டித் தர்றேன்னு சொன்னுங்க. பிறுப்பாடு வரவே இல்லீங்க சாமி. நாங்க பக்கத்துலே இருக்குற பண்ணைக் காரங்க (நிலமுடைய விவசாயிகள்) கிட்டே கொஞ்சம் கடன ஒடன வாங்கித்தான் சமாளிச்சுக்கிட்டுக் கஞ்சி குடிச்சுக்கிட்டு வாரோம்....'' என்றார் குள்ளாயி என்றபெண் மணி.

''உங்களுக்கென்று எந்தச் சொத்தும்


* சின்னான்


* மாதம்மாள்


* சுடுகாட்டுக்குள்தான் குடிசைகள்....

இல்லாதபோது உங்களை நம்பி எப்படிக் கடன் தருகிறார்கள்?'' என்று கேட்டோம்.

''பரம்பரை பரம்பரையா பக்கத்திலுள்ள பண்ணைக்காரங்க தோட்டங்கள்லேதான் சாமி கூலி வேலை செஞ்சுக்கிட்டு வர்றோம். அதை நம்பித்தான் கடன் குடுக்கிறாங்க. நாங்க கூட ரெண்டாயிரம் ரூவா வாங்கியிருக்கிறோம்.இல்லேன்னா இந்தக்குடிசையைக் கட்டியிருக்க முடியுமுங்களா சாமி?'' என்றார் மாதம்மாள் என்ற பெண்.

''அந்த இரண்டாயிரம் ரூபாய்க்கும் வட்டி உண்டா இல்லையா? அன்றாடக் கூலிகளான நீங்கள் எப்படி அந்தக் கடனைத் திருப்பிக் கொடுக்கப் போகிறீர்கள்?'' என்றோம் அவரிடம்.

''வட்டி இல்லாமே யாராவது கடன் குடுப்பாங்களா சாமி? நூத்துக்கு மூணு ரூவா வட்டிங்க. ரண்டாயிரத்துக்கும் வருஷத்துக்கு எழுநூத்தி இருவது ரூவா வட்டிங்க..... அதுக்குத்தான் என் புருஷங்காரரு அவங்க தோட்டத்துலே வேலை செய்யுறாருங்க. வட்டி போகக்கொஞ்சம்கூலி குடுப்பாங்க. அதோட நானும் வேல இருக்கிறப்போப் போவேனுங்க. அதை வெச்சுத்தான் ஓட்டறோமுங்க.....'' என்றமாதம்மாளிடம், ''வட்டிக்கு வேலை செய்து கொண்டே இருந்தால் அசலை எப்போது திருப்பிக் கட்டுவது?'' என்று கேட்டோம்.

''பொழச்சுக் கெடந்தா கட்டாமலா போயிடுவோம். கைக் கொழந்தைங்களுக்கு ஆறேழு வயசாச்சுன்னு அந்தத் தோட்டத்துக்காரர்கிட்டேயே ஆடு குட்டி மேய்க்க வெச்சோம்னு கொஞ்சம் சுதாரிச்சுக்கலாமுங்க. அதுக்குள்ளே நல்லது கெட்டதுன்னு மறுபடியும் அவங்ககிட்டேயே கடனை வாங்கிச் செலவு பண்றதுதான்.....'' என்று சொல்லிக் கொண்டே போனபோது நாங்கள் திகைத்துப் போய்விட்டோம்.

ஆக, கடன் வாங்கிய பணத்துக்கான வட்டிக்காக உழைத்துக் கொண்டிருக்கும் கொத்தடிமைகள்தானா இவர்கள்? கண்ணப்பன் என்ற இன்னொருவரை விசாரித்தோம்.

''எனக்கும் நாலாயிரம் ரூவா கடன் இருக்குதுங்க சாமி. வட்டியே ஆயிரத்தி நானூத்தி நாப்பது ரூவா. என்னோட மூத்த பையன் துரைசாமி (12 வயது)யை வட்டிக்கு வேலை செய்ய அனுப்பியிருக்கிறேன். நானும் செய்யறேன்.ரெண்டாவதுபையனுக்குமூணு வயசாவுது. அவனுக்கும் ஏழு வயசாச்சுன்னு அவனையும் அனுப்பிடுவேன்....'' என்றார்.

அங்கு நின்று கொண்டிருந்த ஒன்பது வயதுச் சிறுமியான தமிழரசியிடம் ''நீ என்னம்மா செய்து கொண்டிருக்கிறாய்? படிக்கிறாயா?'' என்று கேட்டதற்கு, அந்தச் சிறுமியின் தந்தையான சின்னான், ''பள்ளிக் கோடத்துக்கு அனுப்பிப்போட்டா எப்படீங்க? வருஷத்துக்கு ஐநூத்தம்பது ரூவா வட்டி கட்டோணுமுங்க. அதுக்காவ இதை வேலைக்கு அனுப்பியிருக்கறேனுங்க.... பக்கத்திலே தானுங்க ஆடு மேய்ச்சுக்கிட்டு இருக்குது. கூட்டத்தைக் கண்டதும் ஓடி வந்திருக்குதுங்க....'' என்றார்.

''பெண்ணை அனுப்பியிருக்கிறீர்களே... உங்களுக்குப் பையன்கள் யாரும் கிடையாதா?'' என்றோம் சின்னானிடம்.

''இல்லாமெ என்னங்க? ரெண்டு பசங்க இருக்கறாங்க. மூத்தவனுக்கு இருவத்திரண்டு வயசு. எளையவனுக்கு பதினெட்டு வயசு. மூத்தவன் முருகேசன் கல்யாணத்துக்கு வாங்கின ரெண்டாயிரத்து ஐநூறு ரூவா கடனுக்கு வட்டிக்காக எளையவன் வீரமுத்து வேலை செய்யறாருங்க. மூத்தவன் ஏற்கெனவே வாங்குன ஆயிரத்தைநூறு ரூவாய்க்கான



" "எசமான், நீங்கதான் எசமான் ஒரு வழி பண்ண ணும்...."

வட்டிக்காக வேலை செஞ்சுக்கிட்டு இருக்காங்க...." என்றார் அவர்.

"அப்படியானால் இங்கிருக்கும் தொண்ணூற்றைந்து குடும்பங்களில் ஒரு ஹரிஜனக் குடும்பம்கூடக் கடன் வாங்காமல் இல்லையா?" என்று கனத்துப் போன மனத்தோடு கேட்டோம்.

"இருக்குங்க. அதோ பாருங்க.... ஒரு ஓட்டு வீடு. அவங்களும் எங்க சனந்தாங்க. ஆனா அவன் கொஞ்சம் படிச்சதனாலே கண்டக்டர் வேலைக்குப் போய்ட்டான். அவனோட ஒரு குடும்பந்தாங்க இங்கே கடன் இல்லாம இருக்குதுங்க...." என்று ஒட்டுமொத்தமாய்க் கூறினார்கள்.

"அந்தக் குடும்பம் மட்டும் எப்படி முன்னேறியது? நீங்களும் அவர்களைப் போல் உங்கள் குழந்தைகளைப் படிக்க வைத்தால் முன்னேறலாமில்லையா? உங்களைப் போன்ற ஹரிஜனங்களுக்குத்தான் அரசாங்கம் நிறையச் சலுகை காட்டுகிறதே?" என்றோம்.

"கொழந்தைங்களைப் பள்ளிக்கோடத்துக்கு அனுப்பிப் போட்டா அப்புறம் வட்டி எப்படீங்க கட்ட முடியும்? எங்க ஐயா வாங்குன கடனுக்கு நான் வேலை செஞ்ச மாதிரி, நான் வாங்குகிற கடனுக்கு என் கொழந்தைங்க செஞ்சாத்தானுங்களே முடியும்?" என்றார் வார்டு உறுப்பினர் செம்பன்.

"நீங்கள்தான் வார்டு உறுப்பினராச்சே. நீங்கள் உங்கள் எம்.எல்.ஏ. விடமும், பஞ்சாயத்துத் தலைவரிடமும் எடுத்துச் சொல்லி ஏதாவது செய்யக் கூடாதா?" என்று மறுபடியும் செம்பனிடம் கேட்டோம்.

"நான் சொன்னா அவுங்க எப்படீங்க கேட்பாங்க. அவுங்ககிட்டேல்லாம் நான் மறு பேச்சுப் பேச முடியுங்களா....." என்றார் செம்பன்.

ஏதோ அந்த ஹரிஜனங்களுக்கு வீட்டு வசதிதான் செய்து தரப்படவில்லை என்று நாங்கள் விசாரிக்கப் போக, அங்குள்ள தொண்ணூற்றைந்து குடும்பங்களில் தொண்ணூற்று நான்கு குடும்பங்கள் — சுமார் நானூறு பேர்கள் காலங்காலமாகக் கொத்தடிமைகளாகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டபோது அதிர்ச்சியில் திகைத்துப் போய், இன்னும் எத்தனையெத்தனை கிராமங்களில் இப்படி ஹரிஜனங்கள் கொத்தடிமைகளாய்ச் சுரண்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்களோ என்று ரணமான மனத்தோடு திரும்பவும் நாங்கள் காரில் ஏறியபோது, அங்கிருந்த பெரும்பாலான ஹரிஜன ஆண்கள் எங்கள் காரின் முன்னால் சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து, "எசமான்! நீங்கதான் எசமான் எங்களுக்கு ஒரு வழி காட்ட வேணும்...." என்று கதறியபோது, அவர்களின் அவலத்தைக் கண்டு துடித்துப் போனோம். மேலும் அங்கு இன்னமும் தீண்டாமை விட்ட பாடில்லை. வண்ணார், சவரத் தொழிலாளி, ஆகியோரும் ஹரிஜனங்களுக்குத் தனிதான். அத்துணை தீண்டாமை உணர்வு!

கொத்தடிமைகளுக்கான சட்டப் பிரிவு பதினாறின்படி, கொத்தடிமைகளை வைத்திருப்பவர்களுக்கு மூன்றாண்டு கடுங்காவல் தண்டனையும், இரண்டாயிரம் ரூபாய் அபராதமும் அளிக்கப்பட வேண்டும். ஆனால் இப்படிப் பட்ட கொத்தடிமைகளை வைத்துக் கொண்டே, 'எங்கள் தமிழகத்தில் கொத்தடிமைகளே இல்லை' என்று மீண்டும் மீண்டும் பொய் சொல்லிக் கொண்டிருக்கும் அரசாங்கத்துக்கு என்ன தண்டனை?

— இளங்கோவன்

# மாதம் ஒரு மாவட்டம்



கன்னியாகுமரி மாவட்ட மக்களே, நினைவிருக்கிறதா?

கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் நான்காவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது உங்கள் மாவட்டமே தான்! உங்கள் மாவட்டத்திலுள்ள குறைகளும் முறையீடுகளும் தவிர, பெரிய சாதனைகள் பற்றிய கடிதங்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.4.86.

உடனடியாக எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்

# ∴பாரெக்ஸ்®
# முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ∴பாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக் கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கிய தாகும் ∴பாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கிய மாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-∴பாஸ்∴பரஸ் அடங்கியதாகும் ∴பாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ∴பாரெக்ஸ் கலப் பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புதிய மேம்பட்ட ∴பாரெக்ஸ்®

CLARION/B/GX/13/203 TMA



• கொடுமுடியில் காவிரி......



• கோல் பகவிடும் தொழிற்சாலைக் கழிவு நீர் வாய்க்கால் ஒடிக் கலக்கும் நதியாய்....

# காவிரி ஆறு? கழிவு நீர் ஓடையா?

கங்கே ச யமுனே சைவ
கோதாவரி ஸரஸ்வதி
நர்மதே ஸிந்து காவேரி
ஜலேஸ்மின் ஸந்நிதம் குரு

(கங்கை, யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நருமதை, சிந்து, காவேரி நதிகளின் நீரெல்லாம் இங்கே ஒன்று கூடட்டும்!) என்று ஸ்லோகம் சொல்லிப் பூஜைக்கு உபயோகப் படுத்தும் நீரை, அந்த ஏழு நதிகளின் நீரும் ஒன்று சேர்ந்த ஒரு புனித நீராகப் பாவித்துக் கொண்டுதான் அனைவரும் பூஜை செய்கிறார்கள். அந்த அளவுக்குப் புனிதமான நதிகள் அந்த ஏழு நதிகளும்!

அப்படிப்பட்ட ஏழு நதிகளில் தலையாயதான கங்கையின் சுத்தத்தைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை. 'கங்கைச் சுத்திகரிப்புத் திட்டம்' என்று ஒரு திட்டமே தீட்டிச் செயல்பட வேண்டிய அளவுக்கு அது அசுத்தப்பட்டுப் போய்விட்டது என்பதை நாமே கடந்த தீபாவளிச் சிறப்பிதழில் கவர் ஸ்டோரி வெளியிட்டிருக்கிறோம். இன்னும் மற்ற மாநிலங்களில் ஓடும் மற்ற நதிகளின் கதி எப்படியோ, அந்த ஸ்லோகத்தில் கடைசியாகச் சொல்லப்படும் நமது காவிரி நதி எப்படியிருக்கிறது!

சாதாரணக் கிணற்றுத் தண்ணீரையோ அல்லது கார்ப்பொரேஷன் தண்ணீரையோ கூடக் காவிரியின் பெயரைச் சொல்லித் தொட்டாலே பூஜைக்குப் பயன்படும் அளவுக்குப் புனிதமடைகிறபோது அல்லது சுத்தமடைகிறபோது ஒரிஜினல் காவிரி நீர் எத்தனை சுத்தமானதாக இருக்க வேண்டும்! நமது முன்னோர்களை நாகரிகப்படுத்திய நதிக்கரைகளில் ஒன்றான காவிரியைப் பார்க்கும் போதே மனசுக்குள் ஒரு பக்தியும் பரவசமும் சிலிர்ப்பும் ஏற்பட வேண்டாமா? ஆஹா அதுதான் எத்தனை சுகானுபவம்!

இப்படிப்பட்ட கற்பனைகளோடு காவிரிக்குச் சென்றால் செவிட்டில் அறைபட்டது போன்ற அனுபவம்தான் ஏற்படுகிறது. ஈரோட்டுக்குச் சென்றபோது நாங்கள் அப்படித்தான் உணர்ந்தோம். நுங்கும் நுரையுமாக வெள்ளப் பிரவாகமெடுத்து மழைக் காலங்களில் ஒருவித பயம் கலந்த பக்தியை ஏற்படுத்தும் காவிரி, கோடைக் காலங்களில், கண்ணாடியாய்த் தெளிந்த நீரின் அமைதியான ஓட்டத்தில் ஒரு தாயின் பரிவோடு நம்மை ஈர்க்கவில்லை. மாறாக அருகில் சென்றவுடனேயே ஓர் அருவருப்புணர்ச்சியைத்தான் ஏற்படுத்துகிறது.

மேட்டூர் அணையிலிருந்து விடுபட்டுச் சுமார் இரண்டு கி.மீ. தூரம் வந்தவுடனேயே சேலம் மாவட்டத்தையும் பெரியார் மாவட்டத்தையும் பிரித்துக் கொண்டு சுமார் எழுபது கி.மீ. தூரம் ஓடிப் பெரியார் மாவட்டத்திலுள்ள கொடுமுடிக்கு அருகில் திருச்சி மாவட்டத்திற்குள் நுழைகிறது காவிரி. சேலம்—பெரியார் மாவட்டங்களுக்குள் ஓடினாலும் அந்த மாவட்டங்களில் அது நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுவதில்லை என்ற அந்த மக்களின் கோபமோ என்னவோ முடிந்தவரை காவிரியின் ஒவ்வோர் அங்குலத்தையும்



சக்தி சுகர்ஸின் கழிவுநீர் விநியோகம்



வீட்டோரத்தில் கழிவுநீர் குட்டைகள்



காவிரியில் திருப்தியாகக் குளிக்கக்கூட முடியவில்லை...

அசுத்தப்படுத்தாமல் அனுப்புவதில்லை அவர்கள்.

ஈரோட்டை ஒட்டியுள்ள காவிரிக் கரைக்கு நாங்கள் சென்றபோது, கரை முழுவதும் அங்கங்கே அம்பாரம் அம்பாரமாகக் குவிந்து கிடந்த வண்ண வண்ணத் துணிகளைக் கண்டு, ''இவையெல்லாம் எதற்கு இங்கே போடப்பட்டிருக்கின்றன?'' என்று விசாரித்தோம்.

''துணிகளுக்குச் சாயம் ஏற்றப்பட்டுக் காய்ந்தவுடன் அவற்றை மறுபடியும் சுத்தமான தண்ணீரில் நனைத்து அலச வேண்டும். அப்போதுதான் சாயம் கெட்டிப்படும். அதற்காகத்தான் ஈரோடு நகரிலுள்ள அத்தனை சாயத் தொழிற்சாலைகளிலிருந்தும் இங்கே துணிகளைக் கொண்டு வருகிறார்கள்....'' என்றார்கள்.

அருகில் சென்று காவிரி நீரைக் கண்டபோது தண்ணீர் முழுவதும் ஈஸ்ட்மென் கலர் போலக் காட்சியளித்தது. உள்ளே இறங்கிக் கால்களை நனைக்கும் அளவுக்குக் கூட அந்தத் தண்ணீரின் மேல் ஒரு மரியாதை வரவில்லை எங்களுக்கு. பெரியார் மாவட்டமான ஈரோட்டின் இந்தக் கரைப் பக்கம் தான் இப்படியென்றால் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த அடுத்தகரையைச் சுட்டிக் காட்டி, அங்குள்ள சேஷசாயி பேப்பர் மில்லின் கழிவு நீரும் காவிரியில்தான் கலப்பதாகச் சொன்னார்கள்.

இதுதான் என்பதில்லை; ஈரோடு நகரிலுள்ள அத்தனை சாக்கடைகளும் காவிரியில் தான் வந்து கலக்கின்றன. ஆப்பக்கூடலில் உள்ள 'சக்தி சுகர்ஸ்' நிறுவனமும் தன் பங்குக்குத் தனது தொழிற்சாலைக் கழிவு நீரைக்கொண்டு வந்து பெருந்தலையூர் என்னுமிடத்தில் பவானி ஆற்றில் கலக்கப் பிறகு பவானி,கூடுதுறையில் காவிரியுடன் கலக்க.... அந்த அசுத்தத்தையும் காவிரித் தாயின் மடிதான் தாங்க வேண்டியிருக்கிறது என்றும் சில சமயங்களில் காவிரி ஆறே இரண்டு மூன்று நாட்களுக்குச் சிவப்பு நிறமாகத்தான் ஓடுமென்றும் சொன்னார்கள்.

கழிவு நீரைச் சுத்தப்படுத்தப் பல நவீன வழிமுறைகள் கண்டுபிடிக்கப்பட்டு விட்ட



ஈரோடு காவிரிக் கரையில்....



இந்த நாளிலும் சக்தி சுகர்ஸ் நிறுவனம் ஏன் இப்படி நடந்துகொள்கிறது? அதன் நிர்வாக அதிகாரி கணேசனிடம் கேட்டபோது, மெதுவாக ஒரு சிரிப்புச் சிரித்தார். பிறகு, "எங்கள் தொழிற்சாலையிலிருந்து வெளிவரும் கழிவு நீரில் ஒரு துளியும் பவானியில் கலப்பதில்லை. எங்கள் தொழிற்சாலைக் கழிவு நீரெல்லாம் சுற்றுப்புறங்களில் நாங்கள் பயிரிட்டிருக்கும் கரும்பு வயல்களுக்கே பாய்ச்சப்பட்டு விடுகிறது. கழிவு நீரின் அசுத்தங்கள் **(sediments)** மண்ணோடு கலந்துவிடுகின்றன. மழைக் காலங்களில் வெள்ளம் வரும்போது ஏற்படும் மண் அரிப்பினால், எங்கள் தொழிற்சாலைக் கழிவு நீரின் அசுத்தம் கலந்த மண்ணும் அரிக்கப்படுகிறது; அது ஆற்று நீரோடு கலக்கவும் செய்கிறது. அதனால்தான் ஆற்று நீர் செந்நிறமாகிறது.

"ஆனால் இந்தத் தண்ணீர் ஆபத்தானதல்ல. இப்போது நாங்கள் மேல் நாட்டிலிருந்து ஒரு புதிய வழிமுறையை வாங்கி வந்திருக்கிறோம். அதன்படி கழிவு நீரைச் சுத்தப்படுத்தினால் அந்தச் செந்நிறமும் இல்லாமல் போய்விடும். இந்தப் புது வழிமுறையைக்கூடிய சீக்கிரம் சோதனை செய்து பார்க்கப் போகிறோம்!" என்றார் அவர்.

சக்தி சுகர்ஸ் நிறுவனம் தனது கழிவு நீரை நேரடியாக ஆற்றில் கலக்கவிடாவிட்டாலும், அந்த நிறுவனமுள்ள ஆப்பக்கூடல் பகுதியில் கரும்புப் பயிர்களுக்குப் பாய்ச்சப்படுவதால், அந்தச் சுற்று வட்டாரக் கிராமங்களிலுள்ள நிலத்தடி நீர் முழுவதும் கெட்டுப் போய் குடி நீராகப் பயன்படுத்தப்படும் தகுதியையே இழந்துவிட்டது என்பதைச் சக்தி சுகர்ஸ் உள்பட யாரும் மறுக்க முடியாது. அதனால்தான் அந்தப் பகுதியிலுள்ள கிராம மக்களுக்குத் தேவையான குடிநீர் வழங்கும் பொறுப்பை சக்தி சுகர்ஸ் நிறுவனமே ஏற்றுக் கொண்டிருக்கிறது. தினந்தோறும் லாரிகளில் குடிநீரைக் கொண்டு வந்து விநியோகம் செய்கிறது. அந்தச் சமயத்தில் வந்து குடிநீரைப் பிடித்துக்கொள்ள முடியாதவர்கள், தங்கள் வீட்டு வாசல்களில் டிரம்களை வைத்துவிட்டால் அந்த டிரம்களை நிரப்பிவிட்டுச் சென்றுவிடுகிறார்கள். அந்த அளவில் சக்தி சுகர்ஸ் நிறுவனத்தைப் பாராட்டத்தான் வேண்டும். ஆனால் தோல் பதனிடும் தொழிற்சாலையினர் அப்படியில்லை. தங்கள் தொழிலகக் கழிவு நீரை நேரடியாகப் பாசன வாய்க்காலில் கலந்து பாசனமடையும் நிலங்களையெல்லாம் கொஞ்சம்கூட நாணயமில்லாமல் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஈரோடு பக்கத்தில்தான் காவிரி இப்படி அசிங்கப்படுகிறது என்றால் பெரியார் மாவட்டத்தின் எல்லையிலுள்ள கொடுமுடியில் எப்படி இருக்கிறது? அங்குதான் இப்படிப்பட்ட தொழிற்சாலைகள் ஏதும் இல்லையே.... அதனால் இங்கு கலக்கப்படும் அசுத்தங்களெல்லாம் அங்கு போவதற்குள் ஒருவேளை சுத்தமாகிவிடுகிறதோ என்னவோ..... என்ற எண்ணத்தில் கொடுமுடிக்கே சென்றோம்.

அங்கு பிச்சுமணி என்பவரைச் சந்தித்தபோது, "சார் நான் கொடுமுடிக்கு மாற்றலாகி வந்து இரண்டு மூன்று மாதங்கள்தான் ஆகிறது. இங்கு மாற்றலாகி வரும்போது கொடுமுடி காவிரிக் கரையிலுள்ள ஊராயிற்றே. அதனால் தினமும் காவிரியில் குளிக்கலாம் என்ற குதூகலத்தோடுதான் வந்தேன். வந்த அன்றே காவிரிக்குக் குளிக்கச் சென்றபோது தண்ணீர் முழுவதும் சிவப்பு நிறமாக ஓடியதால் முகம் கழுவும் எண்ணம்கூட ஏற்படவில்லை. அப்படியே அதிர்ச்சியோடு திரும்பிவிட்டேன். அதன்பிறகு காவிரியில் குளிக்கும் எண்ணத்தையே விட்டுவிட்டேன். ஏன், இப்போது அந்தப் பக்கம்கூடப் போவதில்லை!" என்றார்.

இவர்தான் இப்படிச் சொல்கிறார் என்றால் அந்தக் காவிரிக் கரையிலேயே பிறந்து வளர்ந்து ஐக்கியமாகிவிட்டவர்கள் என்ன சொல்லுகிறார்கள்?

"முன்பெல்லாம் காலையில் காவிரியில் குளித்துவிட்டுச் சமைப்பதற்காக ஒரு குடத்தில் காவிரித் தண்ணீரையும் எடுத்துக் கொண்டு வருவோம். இப்போது அப்படியில்லை. காவிரித் தண்ணீரில் சமைத்தால் சிறிது நேரத்திலேயே சாதம் நைந்து போய்ப் பிசுபிசுக்க ஆரம்பித்து விடுகிறது. அதனால் அங்கிருந்து தண்ணீர் எடுத்து வருவதையே விட்டுவிட்டோம். சில சமயங்களில் தண்ணீரும் கலர் கலராக ஓடுகிறது. எனவே நாங்கள் சிறுமிகளாக இருந்தபோது குளித்த மாதிரி இப்போது திருப்தியாகக் குளிக்கக்கூட முடிவதில்லை...." என்று விஜயலட்சுமி, ஜானகி, லலிதா, மீனாட்சி, சரோஜா, சுந்தரி என்று அத்தனை பேரும் ஒட்டு மொத்தமாகச் சொன்னார்கள்.

கொடுமுடியில் மகுடேஸ்வரர் வீர நாராயணப் பெருமாள் ஆலயம் இருக்கிறது. அது மும்மூர்த்திகளும் எழுந்தருளியுள்ள ஆலயம் என்பதால் மிகவும் பிரசித்தி பெற்றது. வரும் பக்தர் கூட்டமும் ஏராளம். அப்படியிருந்தும் வரும் பக்தர்களுக்குக் கழிப்பிட வசதிகள் என்பது மருந்துக்கும் இல்லாததால் அனைவரும் காவிரிக்கரையைத்தான் கழிப்பிடமாகப் பயன்படுத்துகின்றனர். அதனால் கரையில் கால் வைத்து நடக்கக்கூட முடியவில்லை எங்களால். காவிரியைப் பார்த்தே ஆக வேண்டும் என்பதால் அங்கங்கே குதித்துக் குதித்துத்தான் சென்றோம்.

இந்தப் பகுதியிலிருந்து பழனிக்குக் காவடி எடுத்துக் கொண்டு செல்லும் பக்தர்கள் சொல்ல முடியாத அளவுக்கு அசுத்தமாகிவிட்ட காவிரியிலிருந்துதான் அபிஷேகத்துக்குத் தீர்த்தம் கொண்டு போகிறார்கள். இப்படி பல கோணங்களிலும் அசுத்தமாகிவிட்ட காவிரி நீரை பழனிக்குக் கொண்டு போவதால்தான் பழனியாண்டவர் சிலையும் அருவருப்படைந்து படிப்படியாகச் சிதிலமடைந்து வருகிறதோ, என்னமோ!

— ப்ரியன்

அட்டையில் ஈரோடு காவிரி.

வண்ணப்படம்: மனோ

# இந்தியா முழுதும் பெருகி வளர்ந்து வரும் சிங்க்ளேர் உரிமையாளர்களுக்கு எங்களின் உணர்ச்சி மிக்க ஒரே வார்த்தை "நன்றி"



சிங்க்ளேர் எங்கும் இருப்பது போலும், போதும் அதிக வீடுகளில் அதிக மக்கள் சிங்க்ளேரையே நாடுகிறார்கள்.

சிங்க்ளேரின் தொழில் நுட்பம் பற்றியோ எதுவும் கூறத் தேவையில்லை. அது கலைத்திறனின் உன்னதப் படைப்பாகும். அழகிய இல்லங்கள் தோறும் வரவேற்பு அறைகளில் அமைதியான அழகுடன் சிங்க்ளேர் கலர் டி.வி. செட்டுகள் அலங்கரிக்கின்றன.

சிங்க்ளேரின் முன்னணி ரெண்டிக் தொழில் நுட்பமும் நேர்த்தியாக வடிவமைக்கப்பட்ட அம்சங்களும் இணைந்து கண்ணுக்கு விருந்தான காட்சிகளை ஆண்டாண்டு காலத்திற்கு அளித்தவாறு உங்கள் இல்லத்தோடு ஒன்றிய பகுதியாக ஆகிவிடுகிறது.

சிங்க்ளேர் சாலஞ்சர் — துரிதமாய்த் துவங்கும் பிக்சர் டியூப் — மென்மையான (ஸாஃப்ட்டச்) எலக்ட்ரானிக் ட்யூனிங் — மற்றும் பல முன்னணி அம்சங்கள்.

**ஒரு புத்தம் புதிய மாருதி காரை உங்கள் உரிமையாக்கிக் கொள்ள அரிய வாய்ப்பு! மற்றும் ஏராளமான உன்னத பரிசுகள் இலவசம், வாய்ப்பு இன்னும் உள்ளது!**

மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள விற்பனையாளரை அணுகுங்கள்.



**Sinclaire**
**Challenger**

**பரிசுகள்**

1 மாருதி கார் 2 ஹோண்டா மோட்டார் சைக்கிள் 5 விடியோ கேம் செட்டுகள் 150 பாக்கெட் ரேடியோக்கள்









**Prestige Plus Performance**

Adwave/STPL/Tam/1/86
















குதிரைப் பந்தயத்தை அரசு ஏற்கும் மசோதாவுக்கு
ஜனாதிபதி ஒப்புதல் தந்துள்ளார்! —






# கல்கி

1986 ஏப்ரல் 20
மலர் 44 இதழ் 38
அக்ஷய சித்திரை 7




# முதுகெலும்புள்ள மனிதர் கே. ஏ. கே.

'அமைச்சரவையில் இலாக்கா மாற்றங்கள் என்பது சகஜம்தானே? அது முதல்வர் அல்லது பிரதமருக்கு உள்ள உரிமைதானே? இதற்காகக் கே.ஏ.கே. கோபித்துக் கொண்டு அமைச்சர் பதவியை மட்டுமின்றி எம்.எல்.ஏ. பதவியைக்கூட ராஜினாமா செய்து கட்சியை விட்டே விலக வேண்டுமா?' என்ற கேள்வி எழத்தான் செய்யும். ஏன், முதல்வர் எம்.ஜி. ஆர். கூட இவ்வாறு எண்ணக் கூடும்.

உண்மைதான். மந்திரிகளின் இலாக்கா மாற்றங்கள் மட்டுமின்றி, அமைச்சரவையிலிருந்து சிலரை நீக்குவதும் வேறு சிலரைப் புகுத்துவதும்கூட முதல்வருக்கு உள்ள உரிமைகள்தான். யாரும் மறுக்க முடியாது. ஆனால் எதற்கும் ஒரு மரபு உள்ளதுபோல் இதற்கும் ஒரு ஜனநாயகப் பண்பு இருக்கிறது. சில காலம் அமைச்சர்களின் செயல்பாடுகளைக் கவனித்த பின்னர், முதல்வர் அல்லது பிரதமர், ஒரிருவர் அமைச்சராக இருக்கவே தகுதியற்றவர் என்று கருதலாம்; வேறு சிலர் இப்போது நிர்வகிக்கும் துறையைவிட வேறு துறையில் இன்னும் சிறப்பாகச் செயலாற்றுவார்கள் என்று எண்ணலாம். இவ்வாறு கணித்த பிறகு ஒட்டு மொத்தமாக மந்திரி சபையில் சில மாற்றங்களைப் பிரதமர் அல்லது முதல்வர் செய்யும்போது அதை, அந்த அமைச்சர்களும் சரி, மக்களும் சரி இலேசாக ஏற்றுக் கொள்வார்கள்.

ஆனால் எம்.ஜி. ஆரின் போக்கு விசித்திரமாக இருக்கிறது. 'திடுதிப்'பென்று வீரப்பனிடமிருந்து ஓர் இலாக்காவைப் பறிக்கிறார். சில நாட்களிலேயே அப்படி பறித்த இலாக்காவை அவரிடமே திரும்பவும் கொடுக்கிறார்! தமது அமைச்சர்களின் செயல்பாட்டினைத் தாமே கணிக்காமல் செயற் குழு, பொதுக் குழு கூட்டங்களுக்கு வந்த கட்சிக்காரர்களை, 'அமைச்சர்களின் செயல் திறனை விமர்சிக்கு'மாறு கேட்கிறார். அதையும் ரகசியமாக எழுதித் தம்மிடம் தருமாறு பணிக்கிறார். ஒரு பொதுக் கூட்டத்தில், "எங்கே எவ்வளவு பெரிய இடத்தில் லஞ்ச ஊழல் இருந்தாலும் அதை என் கவனத்துக்குக் கொண்டு வாருங்கள். நடவடிக்கை எடுக்கிறேன்" என்று மக்களுக்கு அழைப்பு விடுக்கிறார். 'கட்சிப் பணிக்காகப் பதினொரு அமைச்சர்கள் நீக்கப்படுவார்கள்' என்று அறிவிக்கிறார். பிறகு காரணம் எதும் கூறாமல் திடீரென்று அமைச்சர் கே.ஏ.கே. யைத் தண்டிப்பது போல அவரிடமிருந்து தொழிலாளர் துறையைப் பறிக்கிறார்.

மக்கள் என்ன நினைப்பது? கே.ஏ.கே.க்குச் செயல்திறன் இல்லை என்று கருதுவதா? அல்லது அவரை லஞ்ச ஊழல் பேர்வழி என்று முடிவு கட்டுவதா? பதினொரு பேர்களை நீக்கும்போது கே.ஏ.கே.யையும் கவனித்திருக்கலாமில்லையா? அதற்குள் அப்படி என்ன தலைபோகிற அவசரம்? தப்பர்த்தங்கள் செய்து கொள்ள நிறையவே இடம் ஏற்படுகிறது.

இலாக்கா மாற்றத்துக்கான காரணத்தை வெளியே கூறவிட்டாலும் முதல்வர் கே.ஏ.கே.யை அழைத்துப் பேசியிருக்கலாம். அதுவுமில்லை. தில்லியிலிருந்து உத்தரவைப் பிறப்பிக்கிறார்! 'கட்சிக்கும் அதன் தலைவருக்கும் ஆரம்ப காலத்திலிருந்து தொண்டாற்றி வந்துள்ள நமக்கு இதுதானா மரியாதை' என்ற எண்ணம் கே.ஏ.கே.க்கு ஏற்படுவதில் வியப்பில்லை.

கே.ஏ.கே. ஒரு தொழிலாளர் பிரச்னையில் எடுத்த முடிவு முதல்வருக்குப் பிடிக்கவில்லை என்றும் தமது அதிருப்தியைத் தெரிவிக்கும் விதமாகத்தான் இலாக்கா மாற்றம் செய்தார் என்றும் நம்ப இடம் இருக்கிறது. முதல்வரின் இந்தப் போக்கு மிகவும் வருந்தத்தக்கது. காரணம், ஆட்சியின் எந்த ஒரு முடிவும் அமைச்சரவையின் முடிவேயன்றி தனி ஒரு அமைச்சரின் முடிவு அல்ல. எனவேதான் அமைச்சரவை அடிக்கடி கூடி முக்கிய பிரச்னைகளை விவாதித்துக் கருத்தொருமித்துச் செயல்பட வேண்டியது அவசியமாகிறது. இவ்வாறு அடிக்கடி அமைச்சரவைக் கூட்டம் நடக்காது போனால் அது முதல்வரின் தவறே ஆகும். அமைச்சர்கள் தாங்கள் எடுக்கிற ஒவ்வொரு முடிவுக்கும் முதல்வரை அணுகி அனுமதி பெற வேண்டும் என்றால் ஒரு வேலையும் நடக்காது. எனவேதான் மந்திரிசபைக் கூட்டங்களும் கருத்துப் பரிமாற்றங்களும் அவசியமாகின்றன. இதைச் செய்யாமல் அமைச்சர் ஒரு முடிவு எடுத்த பிறகு அது தமக்குப் பிடிக்காத காரணத்தால் அவரை மட்டம் தட்டுவது தும்பை விட்டு வாலைப் பிடிப்பது போல் ஆகும். அப்போது காளை துள்ளவே செய்யும்.

முதுகெலும்பும் மனச்சாட்சியும் உள்ள மனிதன் எப்படி நடந்து கொள்வானோ, அப்படி செயல்பட்டிருக்கிறார் கே.ஏ.கே.

---

தமிழ்த்திரு நாடுதனைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.



* வள்ளி



* ஹரிஜனங்களுக்கான குடிநீர்க் குழாய்களின் கதி.....



* சாமியப்ப கவுண்டர்

* பாப்பாத்தி

* ராமசாமி



* அருக்காணி

# அளவான குடும்பம்தான்...

"ஒன்று பெற்றால் ஒளி மயம்; இரண்டு பெற்றால் இன்ப மயம்!" என்று அரசாங்கம் கோடிக் கணக்காகச் செலவு செய்து விளம்பரம் செய்து கொண்டிருக்கிறது. உண்மையில், ஒரேயொரு குழந்தையோடு மட்டும் நிறுத்திக் கொண்டுவிட்ட குடும்பங்களெல்லாம் ஒளி மயத்தின் பிரகாசத்தில் திக்குத் தெரியாமல்தான் தடுமாறிக் கொண்டிருக்கின்றனவா அல்லது இரண்டோடு நிறுத்திக் கொண்டுவிட்ட குடும்பங்கள் இன்ப வெள்ளத்தின் அசுர வேகத்தில் சிக்கிக் கொண்டு மூச்சுத் திணறிக் கொண்டிருக்கின்றனவா? அதெல்லாம் ஒரு புண்ணாக்குமில்லை என்பதற்கு ஓர் அழியா உதாரணமாகத் திகழ்கிறது, பெரியார் மாவட்டத்திலுள்ள சென்னி மலை — ஊத்துக்குளி மெயின் ரோட்டிலிருந்து சுமார் மூன்று கி.மீ.க்கு மேல் தள்ளிக் கிடக்கும் பாலதொழுவூர் கரட்டுப்பாளையம் என்ற அறுதைக் கிராமம்.

ஹரிஜனங்கள் உள்பட இந்தக் கிராமத்திலுள்ள மொத்தம் எண்பது குடும்பங்களில் நாற்பத்தியொரு குடும்பங்கள் ஒரேயொரு குழந்தையோடு நிறுத்திக் கொண்டுவிட்டன. முப்பத்திரண்டு குடும்பங்களில் இரண்டே குழந்தைகள். மூன்று குழந்தைகள் உள்ளவை ஆறு குடும்பங்கள் மட்டுமே. ஒரேயொரு குடும்பத்தில் மட்டும்தான் ஐந்து குழந்தைகள். இந்தக் கிராமத்தில் மட்டும் அப்படியென்ன அதிசயமான கட்டுப்பாடு?

பிரசவத்தின்போது மனைவியைப் பறிகொடுத்துவிட்டுத் தனது ஒரே மகனுக்காக மறுபடியும் திருமணம்கூடச் செய்து கொள்ளாமல் இருக்கும் ராமசாமி என்பவரிடம், "கிட்டத்தட்டப் பன்னிரண்டாண்டுகளுக்கு



* கல்லூரிப் படிப்புக்கு வசதியில்லாததால் தறி....



* இதுதான் ஊர்ப் பொதுக்கிணறு....

மேல் மனைவியை இழந்துவிட்டு மறுமணம் செய்து கொள்ளாமல் எப்படி உங்களால் வாழ முடிகிறது?'' என்று கேட்டோம்.

அவர் சிரித்தார். பிறகு, ''நமக்குக் குடுத்து வெச்சது அவ்வளவுதானுங்க..... மறுபடியும் கல்யாணம் பண்ணிக்கிட்டா, மூத்த தாரத்துப் பையனை அவ கவனிப்பாங்களா? அதோட நமக்கு இருக்கிற சொத்துக்கு ஒரேயொரு பையன் போதாதுங்களா என்ன?'' என்றார்.

''அதெல்லாம் சரிதான். உங்களுக்கு ஒரு துணை வேண்டுமென்று நீங்கள் நினைக்கவில்லையா? தனிமையை உணரவில்லையா?''

''அதுக்காவ ரண்டாங் கல்யாணம் பண்ணிக்கிட்டுக் கஷ்டப்பட முடியுங்களா? என்னங்க இது வம்பா இருக்கு?'' என்ற அவரிடம் மேற்கொண்டு கேள்வி கேட்க முடியாமல் விடைபெற்றோம்.

ஒரு பையன், ஒரு பெண் என்று இரண்டு குழந்தைகளோடு குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டிருக்கும் சாமியப்ப கவுண்டரைச் சந்தித்துக் கேட்டபோதும், ''ரண்டு கொழந்தைங்களை வெச்சுக் காப்பாத்தி ஆளாக்கி வுட்டாப் போதுமுங்க. அதுக்கு மேலெல்லாம் நம்ம சக்திக்கு ஆகாது'' என்றுதான் சொன்னார்.

ஒரேயொரு பெண் குழந்தையோடு குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்ட பாப்பாத்தி என்ற பெண்மணியிடம், ''என்னம்மா, கொள்ளி வைக்கவாவது ஒரு ஆண்பிள்ளை வேணும்னு சொல்லுவாங்களே?'' என்றோம்.

அவ்வளவுதான் அவருக்கு ரோஷமே வந்துவிட்டது. ''ஏனுங்க, பொண்ணு கொள்ளி வைச்சா இந்தக் கட்டை வேகாதுங்களா?'' என்று எங்களிடம் சண்டைக்கே வந்துவிட்டார்.

''அதுக்கில்லையம்மா! பொண்ணுன்னு வயசு வந்ததும் கட்டிக் கொடுத்துடுவோம். அது புருஷன் வீட்டுக்குப் போயிடும். பிறகு நமக்கு வயசான காலத்திலே கூடமாட ஒத்தாசை பண்றதுக்கு ஆண் பிள்ளைப் பையன் வேண்டாமா? அதுக்காவத்தான் கேட்டோம்!'' என்று அவரைச் சமாதானப் படுத்தினோம்.

''நீங்க சொல்றதும் சரிதாங்க. ஆனா, வரப் போற மருமவ நமக்கு அனுசரணையா இருப்பான்னு சொல்ல முடியுங்களா? அப்படி இல்லின்னா அப்புறம் என்னங்க பண்றது? பையனா இருந்தாலும் பிள்ளையா இருந்தாலும் நம்மகைகால்வலுவா இருக்கிறவரைக்குத் தாங்க'' என்று நறுக்குத் தறித்தது போல் பதில் வந்தது பாப்பாத்தியிடமிருந்து.

அப்போது பாப்பாத்தி வீட்டுக்கு ஏதோ வேலையாகவந்திருந்தபக்கத்துவீட்டுப்பெண்மணியான அருக்காணியிடம் ''உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?'' என்று விசாரித்தோம்.

''ஒரேயொரு பொட்டப் பிள்ளைதாங்க. அதையும் கொஞ்ச நாளைக்கு முன்னால கட்டிக் குடுத்துட்டோமுங்க!''

''உங்கள் கவுண்டர் ஜாதியில் பெண்ணுக்குக் கல்யாணம் என்றால் ஒரு கிலோ, ஒன்றரைக் கிலோ என்று தங்க நகைகள் கொடுப்பதாகச் சொல்கிறார்களே.... நீங்கள் எவ்வளவு கொடுத்தீர்கள்?'' என்றோம்.

''வசதியிருக்கிறவங்க அப்படியெல்லாம் குடுக்கிறதுதாங்க. நாங்க அவ்வளவுக்கெல்லாம்எங்கீங்கபோவோம்?வயித்தைக்கழுவிக்கிட்டு வர்றதே பெரிய காரியமா இருக்கு. நாங்க இருவது பவுன்தாங்க போட்டோம்!''

''இதுமாதிரி மாப்பிள்ளைக்கு வரதட்சணை கொடுக்கிறதெல்லாம் சட்டப்படி தப்புன்னு உங்களுக்குத் தெரியுமா?''

''அதென்னமோங்க; அதெல்லாம் எங்களுக்குத் தெரியாதுங்க. இதுகூடக் குடுக்காட்டி எவங்க நம்ம பிள்ளையைக் கட்டிக்குவான்? சட்டம் பேசறவங்க கட்டிக்குவாங்களா? இல்லே சட்டம் போடறவங்கதான் கட்டி வெச்சுடுவாங்களா?'' என்ற அந்தப்

# ..ஆனாலும் வறுமைதான்

பெண்மணி சொன்னபோது நாம் அசந்து போனோம்!

"அது சரி. இவ்வளவெல்லாம் சிக்கனமாகக் குழந்தை பெற்றுக் கொண்டு வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறீர்களே, உங்கள் புருஷன்மார்களுக்குக் குடிப் பழக்கமெல்லாம் ஏதும் இடையாதா? வாழ்க்கையின் சிரமங்களை உணர்ந்திருக்கும் உங்கள் கிராமத்தில் யாரும் குடிக்கக் கூடாதே?" என்றோம்.

"அதெப்படீங்க. நாள் பூராவும் தறியிலே உட்கார்ந்து அசந்து போற ஆம்பளைங்க, சாயங்காலம் கொஞ்சம் குடிக்கத்தாங்க செய்வாங்க. அதையெல்லாம் நாம பெரிசா எடுத்துக்க முடியுமுங்களா? ஆம்பளைங்கன்னு கொஞ்சம் அப்படி இப்படி இருக்கிறது தாங்க. நாம்பளும் அப்பப்போ சண்டை போட்டுப் பாக்கறதுதாங்க....!" என்றார்கள் அருக்காணியும் பாப்பாத்தியும்.

கடைசியாக அந்தக் கிராமத்திலேயே ஐந்து குழந்தைகளுக்குத் தாயான வள்ளி என்ற ஹரிஜனப் பெண்மணியைச் சந்தித்து, "மற்ற அனைவரும் அதிகபட்சம் மூன்று குழந்தைகளுக்கு மேல் பெற்றுக் கொள்ளாமல் இருக்கும்போது நீங்கள் மட்டும் எப்படி ஐந்து குழந்தைகளைப் பெற்றுக் கொண்டீர்கள்?" என்றோம்.

"ஏதோ அந்தக் காலத்துலே தெரியாமே நடந்து போச்சுங்க. என்னங்க பண்றது?" என்றார் வள்ளி.

"ஐந்து குழந்தைகளை வைத்துக் கொண்டு குடும்பம் நடத்துவது கஷ்டமாக இல்லையா?"

"கஷ்டந்தாங்க. ஏதோ அதுகளையெல்லாம் அங்கங்கே பண்ணையத்திலே வெச்சுத்தாங்க காலந் தள்றோம்."

"ஒரு குழந்தையையும் படிக்க வைக்கலையா?"

"அதெல்லாம் நம்பளால முடியுமுங்களா? கை கால் நல்லா இருந்தா கூலி வேலை செஞ்சு பொழச்சுக்க வேண்டியதுதாங்க..." என்ற அவரிடம், "அது சரிங்கம்மா, இப்பவாவது குடும்பக் கட்டுப்பாடு செஞ்சுக்கிட்டீங்களா?" என்றோம்.

"இப்பத்தாங்க செஞ்சுக்கிட்டுவந்தேன்..." என்று வெட்கத்தோடு சொல்லிவிட்டுத் திரும்பிக் கொண்டு சிரித்தார், வெட்கம் மாறாமலேயே!

இப்படி இந்த வள்ளியைத் தவிர மற்ற அனைவரது குடும்பங்களும் அளவானதாக இருந்தும் ஏன் கஷ்டப்படுகிறார்கள்? வறுமையின் விலாசங்களாய்த் தெரிகிறார்கள்?

இத்தனைக்கும் அந்தக் கிராமத்திலுள்ள தொண்ணூற்றைந்து சதவிகிதத்தினரும் ஐந்து ஏக்கர், பத்து ஏக்கர் என்று நிலமுடைய விவசாயிகள்தான். இருந்தும் ஏன் கஷ்டம்?

நிலமெல்லாம் கிணற்றுப் பாசனத்தை நம்பியிருப்பவை. கிணறுகள் மழையை நம்பியவை. மழையோ பல ஆண்டுகளாக அந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவே மறந்துபோய்விட்டது. அதனால் கிணறுகளில் குடிக்கக்கூடத் தண்ணீர் இல்லாத நிலை. இதில் விவசாயம் எப்படிச் சாத்தியம்? அதனால் ஊரிலுள்ள அத்தனை குடும்பங்களும் விவசாயத்தை மூட்டை கட்டி வைத்துவிட்டு நெசவுத்தொழிலுக்கு வந்துவிட்டன! நெசவுதான் இப்போது அந்தக் கிராமத்துக்கே சோறு போட்டுக் கொண்டிருக்கிறது.

அளவான குடும்பமாக இருந்தும் வறுமையின் கட்டாயத்தால் இப்படித் தொழிலையே மாற்றிக் கொண்டு காலம் தள்ளி வரும் அந்தக் கிராமத்துக்கு அரசு ஏதும் செய்யவில்லையா? வெளியில் சொன்னால் வெட்கக்கேடு! அந்தக் கிராமத்திற்கு இன்னமும் சாலை வசதிகூட இல்லை. சென்னிமலை — ஊத்துக்குளி மெயின் ரோடிலிருந்து சுமார் மூன்று கி.மீ.க்கு மேல் 'இட்டேரி' என்று சொல்லப்படும் இலுவ முள் வேலியிட்ட தரிசுப் பாதையில்தான் முள்களை விலக்கிக் கொண்டு வர வேண்டும். ஊர்ப் பொதுக் கிணற்றைக்கூட அரசு ஆழப்படுத்த முன்வரவில்லை. ஹரிஜனக் குடியிருப்பில் மேல்நிலை நீர்த் தொட்டியெல்லாம் கட்டி வைக்கப்பட்டு திறப்பு விழா நடத்தி விளம்பரம் செய்து கொள்ளப்பட்டதோடு சரி; அதில் தண்ணீர் வந்த காலத்தை யாராலும் நினைவுபடுத்திச் சொல்ல முடியாத கொடுமைதான்!

இந்தக் கிராமத்தின் வறுமை தீர என்னதான் வழி? வயல்களெல்லாம் நீர்ப் பாசன வசதி செய்யப்பட வேண்டும். அது சாத்தியமா?

"இப்போது எங்கள் கிராமத்திலிருந்து பத்து கி.மீ. தொலைவில் பன்னிரண்டு கோடி செலவில் புதிதாகக் கட்டப்பட்டு வரும் நொய்யல் ஒரத்துப்பாளையம் நீர்த்தேக்கத்தின் மூலம் எங்கள் பகுதியைச் செழிப்படையச் செய்யலாம். ஆனால் அந்த நீரைப் பாலைவனமாய் வறண்டு கிடக்கும் எங்கள் பகுதிக்குத் தராமல் பாசன வசதி மிக்க திருச்சி மாவட்டத்துக்கே எல்லா நீரையும் கொடுக்கப் போகிறார்களாம்! அதுதான் அதிசயமாக இருக்கிறது. நாங்கள் என்னதான் செய்ய முடியும்? இன்னும் வறுமை வாட்டினால் நிலமெல்லாம் எக்கேடாவது கெடட்டும் என்று வேறு ஊருக்குப் பிழைப்புத் தேடிப் போவதைத் தவிர வேறு வழியில்லை...." என்றார் அந்தக் கிராமத்திலிருந்து தினந்தோறும் பதினைந்து கி.மீ. தூரத்தைச் சைக்கிள் மூலமாகவும், மீதி இருபது கி.மீ. தூரத்தை பஸ் மூலமாகவும் கடந்து ஈரோடு சென்று கல்லூரியில் படித்து வரும் குப்புசாமி என்ற இளைஞர்.

ஆக,அளவான குடும்பத்திற்காக மட்டும் அரசு பிரசாரம் செய்தால் போதாது. பிறந்துவிட்ட குழந்தைகளுக்கான எதிர்காலத்துக்காகவும், பெற்றோர்களின் வேலை வாய்ப்பைப் பெருக்குவதற்காகவும் திட்டம் தீட்டிச் செயல்படுத்த வேண்டும். அப்படிப்பட்ட புதிய திட்டங்கள் இல்லாமல் வறுமையை ஒழிப்பதாகப் பிரசாரம் செய்வதோ அல்லது அத்தனை கோடி மக்களும் அப்படியே அந்தர் பல்டி அடித்து, இருபத்தோராம் நூற்றாண்டுக்குச் சென்றுவிட முடியுமென்று சொல்லுவதோ மிகப் பெரிய மோசடியாகத்தான் இருக்க முடியும்.

— பிரின்ஸ்

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | [illegible] |
| கொழுப்பு | [illegible] |
| கார்போ | [illegible] |
| ஹைட்ரேட் | [illegible] |
| கால்ஷியம் | [illegible] |
| பாஸ்பரஸ் | பென்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு (மி வடிவில்) | வைட்டமின் (பி) |
| | வைட்டமின் (பி) |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் ஸி |
| அயோடின் | வைட்டமின் [illegible] |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் [illegible] |
| வைட்டமின் 'டி' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

584. GLC. 120 Tm

வட்டமேஜை

# இன்னும் எத்தனை எத்தனையோ...

* திருநெல்வேலி மாவட்டம் இராதாபுரம் கிராமத்தைப் பற்றிய விவரங்களை நன்றாக எழுதியிருந்தீர்கள்.

குமரி அனந்தன், மற்றும் அமைச்சர் யூசுப் ஆகியோருடைய தொகுதியாக இருந்தாலும்கூட வலம்புரி ஜான் அவர்கள் முயற்சியால்தான் குடிநீர் வசதியும் போதுமான பஸ் போக்குவரத்து வசதியும் கிடைக்கப் பெற்றோம். கள்ளுக் கடையை முதலில் இடமாற்ற வேண்டிய ஏற்பாட்டைச் செய்து தந்தது வலம்புரி ஜான் தான்.

ராதாபுரம். தமிழ் மன்னன்

* இதுவரையில் நாங்கள் கேள்விப்பட்டதெல்லாம் செத்த அன்றைக்கு வா என்றால் பத்து அன்றைக்கு (பத்தாம் நாள்) வருவார்கள்! என்பதைத்தான். ஆனால் திருநெல்வேலி மாவட்டம் இராதாபுரம் மக்கள் மனம் நொந்து சொன்ன, 'சாகக் கிடக்கிறான்னு சொன்னா செத்த பதினாறுக்கு வருவாங்க!' என்ற வார்த்தை இருக்கிறதே.... அப்பப்பா, எங்களுக்கெல்லாம் மிக்க வருத்தத்தை அளித்தது. நம் தமிழக அரசு இது போல் இன்னும் எத்தனை ஊர்களை இப்படி வைத்திருக்கிறதோ?

எஸ். ராம கோபால்.
சென்னை—33.

* மதுவிலக்கையும் சத்துணவுத் திட்டத்தையும் இணைத்து எழுதப்பட்டிருந்த தலையங்கத்தை முதல்வருக்குப் படித்துக் காட்டிட, அல்லது சுட்டிக் காட்டிட அநேகமாய் அந்தக் கட்சியில் ஆளே இருக்கமாட்டார்கள்; எனவே உமது ஆசிரியர் குழுவில் ஒருவரை முதல்வரிடம் அனுப்பி வைத்துத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

பெங்களூர்—21. ப. மூர்த்தி.

* குழந்தைகள் நலத்தைக் காக்கச் சத்துணவுத்திட்டம் தொடர்ந்து குறை இன்றிச் செயல்படவும், பெற்றோர்கள் உடல் நலத்தைக் காக்க, மதுவிலக்கை உடன் அமுலாக்கவும் அதனால் அரசுக்கு வருமான இழப்பு இல்லை என்பதைத் தெளிவாக ராஜாஜி கொண்டு வந்த விற்பனை வரியின் அருமையை எடுத்துரைத்து தலையங்கத்திற்குள்ள தனிப்பெரும் கடமையைத் தவறாமல் செய்துவிட்டீர்கள்.

லால்குடி. எம். இராஜேந்திரன்.

* அட்டைப் படத்தில் விஜுவின் ஓவியம் ரொம்ப.... ரொம்ப.... அபாரம். கதைக்காக அடுத்த வாரம் வரை காத்திருக்க வேண்டுமா என்ற ஏக்கத்தை ஏற்படுத்தி விட்டது முகப்போவியம்!

ஈரோடு. செல்வ பாரதி.

* தனது கொள்கைகளை மற்றவர்கள் ஏற்கும் அளவிற்கு வாதங்களை ஸ்திரப்படுத்தும் பாங்கையும், தனது நிலையில் மாறாத குணத்தையும் தெரிந்து கொள்ள உதவியது ராஜாஜி வாழ்க்கை வரலாறு.

குடியாத்தம். ஸ்ரீலைபரிதாசன்.

* சினிமா இதழ்களை 'பிலிம் போத்சவ்'ல் ஒன்றும் இல்லை என்று மூட்டை கட்டி வைத்து விட்டபோது, 'ஏதோ இருந்திருக்கும் போல் இருக்கிறதே' என்று நினைக்கும் அளவிற்கு நல்ல திரைக் கதைகளை விறுவிறுப்பாக்கிச் சுருக்கிக் கொடுத்த ஜெயமன்மதனின் ரசனை பிரமாதம்.

பெங்களூர். வி. ரமேஷ்.

* 'பத்மநாபன் சாகவில்லை' உண்மை நிகழ்ச்சியைப் படித்ததும், கண் தானம் செய்ய வேண்டும்




என்று ஏற்கெனவே எனக்கிருந்த ஆர்வம் அதிகரித்திருப்பதை உணர்ந்தேன்.

சீர்காழி. க. இளங்கோ.

* ஸ்வாதி நட்சத்திரத்தில் பிறந்திருக்கும் என் நண்பரின் ஆண் குழந்தைக்கு என்ன பெயர் வைக்கலாம் என்று அவர் குழம்பிக் கொண்டிருந்த நேரத்தில் கிருபானந்த வாரியாரின் பதில்கள் கை கொடுத்து உதவியது! வாரியாரின் பெயரை அதாவது கிருபானந்தன் என்கின்ற அவரது இயற்பெயரையே குழந்தைக்குச் சூட்டத் தீர்மானித்துவிட்டோம்.

சென்னை—40. பா. நாராயணன்

* 'தமிழக அரசியல்வாதிகளைப் பற்றிய 'பழக்க வழக்கம்' என்ற அந்த நடுப்பக்க கார்ட்டூன்களைக் கண்டு, என்னையே மறந்து சிரித்து விட்டேன். அரசியல்வாதிகளின் பேச்சுகளுக்கேற்ற உமாபதியின் கார்ட்டூன்கள் பிரமாதம்!

திருச்சி. ஆர். அப்துல் சலாம்.

* கல்கி 6.4.86 இதழில் வாசகர் குமுறலில் கண்டுள்ளபடி "பரிசுத் திட்டம்" நீட்டிக்கப்பட்டு முடிவடைந்த பின்னர், அகில இந்திய அளவில் செயல்பட்டு வரும் கோ—ஆப்டெக்ஸின் 600 விற்பனை நிலையங்களில் இருந்தும் குலுக்கலில் பங்கு பெறத் தகுதி பெற்ற பரிசுக் கூப்பன்களின் விவரம், பில் நம்பர் வாரியாக (கடன் விற்பனை உட்பட) கேட்கப்பட்டிருந்தது. அவை அனுப்பி வைத்த விவரங்களைக் கம்ப்யூட்டர் முறையில் மாற்றி அமைப்பதில், தாமதம் ஏற்பட்டுள்ளது. தற்போது பரிசுக் குலுக்கலுக்கான அனைத்து ஏற்பாடுகளும் முடிவடைந்து ஏப்ரல் '86 மூன்றாவது வாரத்தில் நடுவர்கள் குழு முன்னிலையில் கம்ப்யூட்டர் முறையில் கைத்தறித் துணி பரிசுத் திட்ட குலுக்கல் நடைபெற உள்ளது.

சென்னை—8. சுந்தர நடராஜன்
கோ ஆப்டெக்ஸ் தனி
அலுவலருக்காக.

இதில் வரும் கதாபாத்திரங்களும், சம்பவங்களும் நிஜமானவையே. விசாரித்த உண்மைகளின் அடிப்படையில், தானே ஒரு கதாபாத்திரமாகி எழுதுகிறார் நமது நிருபர்.

# யார் முடிப்பது?

## காட்சி — 1.

(பெரியார் மாவட்டம் கொடுமுடிக்கு அருகிலுள்ள தாமரைப் பாளையத்திலிருக்கும் பிராஞ்ச் போஸ்ட் மாஸ்டர் கணேசன் வீடு. நாள்: 21.2.85. வியாழக் கிழமை. காலை சுமார் எட்டு மணி. கணேசனின் மனைவி விஜய சரஸ்வதி காவிரி ஆற்றுக்கு அக்கரையிலிருக்கும் தன் அம்மா வீட்டுக்குச் செல்லும் பரபரப்பில் இருக்கிறாள்.....)

விஜய சரஸ்வதி: ஏன்னு, அம்மா என்னை வரும்போது ஸ்டவ்வும், கொஞ்சம் மஞ்சள் பொடியும் கொண்டு வரச் சொன்னு. (தன் இரண்டு குழந்தைகளையும் சுட்டிக்காட்டி) இதுகளுடைய ஹாட்டியைத் தாங்க முடியலே. சித்தெ நாழி இதுகளைப் பார்த்துக்கிட்டேன்னு, எல்லாத்தையும் எடுத்து வெச்சுடுவேன். வர்றேளா?

கணேசன்: மாசத்துக்கு ரெண்டு தரம் அம்மா வீட்டுக்குப் புறப்படறே. ஒரு நாளாவது பரபரப்பில்லாமே கிளம்பியிருக்கியா? நீ புறப்படணும்னு என்னையே கூட்டாமெ புறப்படமாட்டியே......? சரிசரி, போய்ட்டு எப்போ வருவே?

விஜய: காவிரிக்கு அக்கரையிலதான் பொறந்த வீடு இருக்குன்னு பேரு. அவா அவா மாதிரி நானென்ன அடிக்கடியா போறேன்? ஏதோ மாசத்துக்கு ரெண்டு தரம் போய்ட்டு வர்றேன். அதுவும் போனது வந்தது தெரியாமெ ரெண்டு நாள்லே திரும்பி வந்துடறேன். அது பொறுக்காதே?

கணே: ஆரம்பிச்சுட்டியா? உன்னை யாரு போக வேண்டாம்னு? போம்போது என்னைத் தொந்தரவு பண்ணுமெ போன்னு தான் சொல்றேன்.

விஜய: என்ன தொந்தரவு பண்ணிட்டேன்? உங்களுக்கும், கொழந்தைங்களுக்கும் சமைச்சு வெச்சுட்டேன். கொழந்தைகள் ஸ்கூலுக்குப்போகடிரஸ் பண்ணியும்விட்டுட்டேன். ராத்திரி டிபனுக்கு அரைச்சும் வெச்சுட்டேன். சித்த நாழி கொழந்தைங்களைப் பார்த்துக்கோங்கன்னு அது தொந்தரவா? நாள்பூரா நான்தானே பார்த்துக்கறேன்...

கணே: அம்மா, தாயே..... போதும். நீ பொறப்படு. குழந்தைங்களைப் பார்த்துக்கறேன்.

விஜய: (புறப்படத் தயாரான நிலையில்) பட்டியானத்துக்குச்சாகம் இருக்கு. ராத்திரிக்கு மாவு இருக்கு. தோசை வார்த்துக்கறேளா, இல்லே....

கணே: ஏதோ பண்ணிக்கறேன், நீ பொறப்படு.

விஜய: ஏன்னு, நான் சொன்னதெல்லாம் மனசுலெ வெச்சுக்கிட்டேளா, இல்லே....

கணே: எல்லாம் வெச்சுக்கிட்டாச்சு. இனியும் வெச்சுக்க இடமில்லே. பொறப்படு. நானும் கொழந்தைங்களை அனுப்பிட்டுத் தோட்டத்துக்குப் போகணும்.

(விஜய சரஸ்வதி குழந்தைகளுக்கு டாடா காட்டிக் கொண்டே புறப்பட அவர்களும் அம்மாவுக்கு டாடா காட்டுகின்றனர்.)

## காட்சி — 2

(அதேநாள் மாலை சுமார் நாலரை மணி. பாரஸ்ட் ரேஞ்சர் அவசரம் அவசரமாக கொடுமுடி போலீஸ் ஸ்டேஷனுக்குள் நுழைகிறார். அங்கே ஒரே ஒரு கான்ஸ்டபிள் மட்டும் ஏதோ சுவாரஸ்யமாகப் படித்துக் கொண்டிருக்கிறார்.)

ரேஞ்சர்: (பதற்றத்துடன்): சார்.... சார்...

கான்ஸ்டபிள்: (சுவாரஸ்யத்தை விலக்கிக் கொண்டு): என்னங்க சார்? என்ன ஆச்சு? ஏன் பதற்றப்படறீங்க? அமைதியா உட்காருங்க. பிறகு விஷயத்தைச் சொல்லுங்க.

ரேஞ்சர்: காவேரிக் கரைப் பக்கமுள்ள வெங்கம்பூர் பாரஸ்ட்லே ஒரு பெண் பிணம் கிடக்கிறது. கொலையோன்னு சந்தேகமா இருக்கு.

கான்ஸ்: அப்படியா? நடந்ததை விவரமாச் சொல்லுங்க.....

ரேஞ்சர்: நடந்ததெல்லாம் எனக்கென்ன தெரியும்? பாரஸ்ட்லே எங்க ஆளுங்க மரம் வெட்டிக்கிட்டிருந்தாங்க. நானும் இருந்தேன். திரும்பி வாறப்போ பிணம் கிடக்கிறதைப் பார்த்தேன். கொலையாத்தான் இருக்கும்னு தோணுச்சு. ஓடி வந்தேன். நீங்க என்னடான்னு ஏதோ கொலையை நானே நேர்லே பார்த்துட்டு வந்த மாதிரி சொல்லச் சொல்றீங்களே.....?

கான்ஸ்: தப்பா நெனச்சுக்காதீங்க சார். நீங்க பார்த்த விவரத்தைத்தான் சொல்லச் சொன்னேன். எப்.ஐ.ஆர். எழுதப் பண்ணணுமில்லீங்களா அதுக்குத்தான்.

ரேஞ்சர்: சரிசரி, உடனே புறப்பட்டுப் போலாங்க சார்.



* கணேசன்: தனது இரண்டு குழந்தைகளுடன்....

— ஓர் உண்மையான க்ரைம் நாடகம்

கான்ஸ்: உடனே போறதுக்கெல்லாம் ஆளுங்க யாரும் இல்லீங்க சார். நான் ஒருத்தன்தான் இங்கே இருக்கேன். சப்—இன்ஸ்பெக்டர், சர்க்கிள் இன்ஸ்பெக்டர், மத்த கான்ஸ்டபிளுங்களெல்லாம் ஈரோட்டுக்கு மீட்டிங் போயிருக்காங்க. வந்த பிறகுதான் போக முடியும். தகவல் சொல்லிட்டீங்கல்ல, இனி எங்க பாடு. இனி நீங்க நிம்மதியாப் போங்க..... அது சரி, அந்த அம்மா யாருன்னு உங்களுக்குத் தெரியுமுங்களா சார்?

ரேஞ்சர்: எனக்கென்ன தெரியும்? இனிமே உங்க பாடு. நீங்கதான் கண்டு பிடிக்கணும்.

(ரேஞ்சர் புறப்பட்டுப் போய்விடுகிறார்.)

### காட்சி — 3

(மறுநாள் காலை பதினொருமணி. தாமரைப் பாளையம் கிளை தபால் அலுவலகத்தில் கணேசன் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருக்கிறார். கொடுமுடியிலிருந்து அன்றைய தபால்களைக் கொண்டு வந்த வெங்கட்டன் பரபரப்போடு போஸ்டாபீஸுக்குள் நுழைகிறார்.)

கணேசன்: என்ன வெங்கட்டா, ரொம்பப் பரபரப்போட வர்றியே என்ன சேதி?

வெங்கட்: வெங்கம்பூர் பக்கத்துப் பாரஸ்ட்லே யாரோ ஓர் அம்மாவை கொலை செஞ்சு போட்டிருக்காங்களாம். கொடுமுடியில் ஒரே பரபரப்பாய் பேசிக்கிறாங்க. உங்களுக்கு ஒண்ணுமே தெரியாதா?

கணே: அப்படியா? எனக்கு எதுவுமே தெரியாதே!

வெங்கட்: பார்த்தா பாப்பாரப் பொண்ணு மாதிரி தெரியுதுன்னு பேசிக்கிறாங்க.

கணே: (திடுக்கிட்டவராய்) அப்படியா பேசிக்கிட்டாங்க? சரிசரி வேலையைக் கவனி. எனக்கும் வேலையிருக்கு.

(கணேசனுக்கு வேலையே ஓடவில்லை. 'நேற்றுச் சென்ற தன் மனைவியாக இருக்குமோ? பாப்பாரப் பொண்ணுன்னு வேறே யாரா இருக்க முடியும்? இருக்காது. இருக்காது. இவதான் நேத்திக்கே போய்ட்டாளே! இவங்க இன்னிக்குத் தானே பேசிக்கிறாங்க! இருந்தாலும் போய்ப் பார்த்துடணும்' என்று எண்ணிய படியே அவசரம் அவசரமாக வேலைகளை முடிக்கத் தொடங்குகிறார்.)

### காட்சி — 4

(காவிரிக்கு அக்கரையிலுள்ள ஆனங்கூர். விஜய சரஸ்வதியின் அண்ணன் நாகேஸ்வரன், தன் மனைவி பத்மாவதியின் மேல் கோபத்தோடு வீட்டுக்குள் நுழைகிறார்.)

நாகேஸ்வரன்: என்ன பத்மா? ஏன் பொறப்பட்டு வரலே? உனக்காக அக்கரையிலே காத்துக்கிட்டிருந்தேன். காலையிலேயே வர்றேன்னே. மணி ஒன்பதாயும் வரலே. அப்படியென்ன தலை போற வேலே?

பத்மாவதி: அக்கரையிலே யாரையோ கொலை செஞ்சு போட்டிருக்காங்களாம். பேசிக்கிட்டாங்க. அதுதான் பயமா இருந்துச்சு, வரலே.

நாகேஸ்: என்ன பயம்? என்ன பயம்னேன்? நான் இப்போ அந்த வழியா வந்து தானே பரிசல்ல ஏறி இங்கே வர்றேன். வர்ற வழியிலே அங்கே போலீஸ்காரங்க நின்னுகிட்டு என்னைக் கூடக் கூப்பிட்டு விசாரிச்சாங்க. பொணங்களைப் பார்க்கப் பயப்படும் நான்கூட போலீஸ்காரங்ககிட்டே பதில் சொல்லிட்டுத்தான் வந்தேன்.

பத்மா: நீங்க பார்த்தேளா? யாரோ பொம்மனாட்டிதானுமே!

நாகேஸ்: என்ன எழவோ? நான் சரியாவே பார்க்கலே. யாருன்னு தெரியுமான்னு

போலீஸ்லே கேட்டாங்க. தெரியாதுன்னேன். அப்படின்னு கையெழுத்துப் போட்டுட்டுப் போன்னுங்க. நாலஞ்சு பேர் கையெழுத்துப்போட்டாங்க. நானும் அவுங்களோட ஒரு கையெழுத்துப் போட்டுட்டுத்தான் வந்தேன். ஏதோ ஸ்டவ், மஞ்சள் தூள் எல்லாம்கூட சிதறிக் கிடக்குதுன்னு பேசிக்கிட்டாங்க.

*(ஸ்டவ், மஞ்சள் தூள் என்ற வார்த்தைகளைக் கேட்டதும் நாகேஸ்வரனின் அம்மா துடித்துக் கொண்டு வருகிறார்.)*

நாகேஸ்வரனின் அம்மா: என்ன? ஸ்டவ்வா? மஞ்சள் தூளா?

நாகேஸ்: ஆமாம்மா!

நா. அம்மா: நான்கூட நம்ம விஜயாவை ஸ்டவ்வை எடுத்துக்கிட்டு, மஞ்சள் தூளும் கொண்டு வரச் சொன்னேன்! நீ என்னடா சொல்றே? புறப்படுங்கடா போய்ப் பார்த்திட்டு வருவோம்.

*(அனைவரும் படபடப்போடு புறப்படுகின்றனர். ஆனாலும் பிணம் கிடக்கும் ஊர் வழியாக வரப் பயந்து வேறோர் ஊர் வழியாகக் காவிரியைக் கடந்து சென்று தாமரைப் பாளையத்தை அடைகின்றனர். அப்போது கணேசனும் தனது அலுவல்களை முடித்துக் கொண்டு புறப்படத் தயாராய் நிற்கிறார். அவரைக் கண்ட இவர்கள், 'விஜயா எங்கே?' என்று விசாரிக்க அவர், 'உங்கள் வீட்டுக்குத் தானே வந்தாள்!' என்று சொல்ல, அனைவரும் கொலையானது விஜய சரஸ்வதிதான் என்று உறுதிப்படுத்திக் கொண்டு வெங்கம்பூர் பாரஸ்டை நோக்கிக் கதறிக் கொண்டு செல்கின்றனர்.)*

### காட்சி — 5

*(தாமரைப் பாளையத்திலிருந்து சென்றவர்கள் அந்த இடத்தைச் சென்றடைவதற்கும், போலீஸார் பலரையும் விசாரித்த பிறகும் பிணத்தை அடையாளம் கண்டு பிடிக்க முடியாமல், அங்கேயே போஸ்ட் மார்ட்டம் செய்து முடித்துப் பிணத்தையும் புதைத்துவிட்டுத் திரும்ப ஆரம்பிப்பதற்கும் சரியாக இருக்கிறது.)*

கணேசன் (போலீஸாரிடம்): சார், அவள் என் மனைவிதான்.

போலீஸ்: உங்கள் மனைவியா? இதோ பிணத்திலிருந்து சாம்பிளுக்கு எடுத்து வைத்துள்ள சேலைத் துண்டு, நன்றாகப் பார்த்துச் சொல்லுங்கள்.

கணே: அவள் கட்டியிருந்த சேலைத் துணியேதான் சார். அவள் என் வீட்டுக்காரியேதான்.

போலீஸ்: அப்போ ஏன் இதுவரைக்கும் வர்லே?

கணே: எனக்குச் சேதியே தெரியாது சார். தெரிஞ்சதும் புறப்பட்டு வந்தேன்.

போலீஸ்: (கணேசன் அருகிலிருக்கும் நாகேஸ்வரனைப் பார்த்துவிட்டு): இவர் யார்?

கணே: என் மச்சினன் சார். என் வீட்டுக்காரியோட அண்ணன்.

போலீஸ்: இவரே பார்த்துட்டு தனக்கு யாருன்னே தெரியாதுன்னு கையெழுத்துப் போட்டுட்டுப் போனாரே?

கணே: அவர் பிணத்தைப் பார்க்கவே பயப்படுவார் சார். அந்த பயத்திலேதான் சரியாப் பார்க்காமெ கையெழுத்துப் போட்டுட்டுப் போயிருக்கார் சார். தயவு பண்ணிப் பிணத்தை எங்ககிட்டே ஒப்படைங்க சார். எங்க வழக்கப்படி பொதைக்கக் கூடாது. எரிக்கணும் சார்.

போலீஸ்: இனிமே நாங்க எதுவும் பண்ண முடியாது. பொதச்சதைத் திரும்பவும் எடுக்க எங்ககிட்டே அதிகாரம் இல்லே. வேணும்னு போஸ்ட் மார்ட்டம் முடிஞ்சதும் நேரே நீங்க வந்து டெட் பாடியை வாங்கிக்கிட்ட மாதிரி எழுதிக் கையெழுத்துப் போட்டுக் குடுங்க. பிறகு நீங்களே தோண்டி எடுத்துச் சடங்குகளைச் செஞ்சுக்குங்க. டெட் பாடியோட அண்ணனே தனக்கு அடையாளம் தெரிலேன்னு கையெழுத்துப் போட்டிருக்கிறது எவ்வளவு பெரிய தப்புன்னு தெரியுமா?

*(கணேசனும் மற்றவர்களும் வேறு வழியின்றி போலீஸ் சொன்னபடியே எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிட்டுப் பிணத்தைத் தோண்டியெடுத்துச் சடங்குகளைச் செய்து முடிக்கின்றனர். விஜய சரஸ்வதி அணிந்திருந்த பதின்மூன்று பவுன் நகைகளும் காணாமல் போய்விட்டன. கொலை செய்தது யார்? இதுவரை, அதாவது கொலை நடந்து, ஓராண்டுக்கு மேலாகியும் எந்தவிதமான தகவலும் இல்லை. போலீஸாரைக் கேட்டால் 'தனக்கு அடையாளம் தெரியலேன்னு டெட் பாடியோட அண்ணனே கையெழுத்துப் போட்டிருப்பது எவ்வளவு பெரிய குற்றம்னு தெரியுமா?' என்று கேட்டே இவர்களை மடக்கிக் கொண்டிருக்கவே, கணேசன் குடும்பத்தினர் கல்கி அலுவலகத்துக்குக் கடிதம் எழுதுகின்றனர்.)*

### காட்சி — 6

*(கடந்த 13.3.86 அன்று தாமரைப் பாளையத்திலுள்ள கணேசன் வீட்டுக்குச் செல்கிறார் கல்கி நிருபர். அப்போது இறந்துபோன விஜய சரஸ்வதியின் முதலாண்டு சிரார்த்தத்துக்கான வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. கல்கி நிருபரிடம் ஆதியோடு அந்தமாக நடந்த சம்பவங்களை விளக்குகிறார் கணேசன். விஷயங்களைக் கேட்டுக்கொண்ட நிருபர் கொடுமுடி போலீஸ்ஸ்டேஷனுக்குச் செல்கிறார். அப்போதும் ஸ்டேஷனில் ஒரேயொரு கான்ஸ்டபிள் மட்டும்தான் இருக்கிறார். மற்றவர்களெல்லாம் ஈரோடு கோர்ட்டுக்கு கேஸ் விஷயமாகச் சென்றிருப்பதாகச் சொல்கிறார் கான்ஸ்டபிள். சம்பந்தப்பட்ட அதிகாரிகள் வந்ததும்

காட்பரிஸ்

# போர்ன்விடா

MILK

Cadbury's Bournvita

MILK

Bournvita

Cadbury's Bournvita

NOW SAVE Rs.2/-

SUGAR

MALT

COCOA

## சுறுசுறுப்பு பானம்!

போர்ன்விடா—கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் ஊட்ட கலன்களைக் கொண்ட ஒரு உன்னத உணவு பானம் ஆகும். 100 ஆண்டுகளுக்கும் மேலாக அனுபவம் உடைய காட்பரி நிபுணர்களால் தயாரிக்கப்படுவது போர்ன்விடா.

ஒவ்வொரு கப் பாலுடனும் இரண்டு ஸ்பூன் போர்ன்விடா சேர்த்து, உங்கள் குடும்பத்தினருக்கு நலமான சுவையான பானம் அளியுங்கள். வளரும் குழந்தைகளுக்கு விசேஷமாக நன்மை அளிப்பது போர்ன்விடா. அவர்களுக்கு தேவைப்படும் விசேஷ ஊட்டச் சத்தும் சூடிகையும் பெற்றிட தினமும் இருவேளை அவர்களுக்கு போர்ன்விடா தாருங்கள்.

கவனத்துடன் வளர்த்திடும் ஒரு அன்னை கூறுகிறாள் "என் குழந்தைகளுக்கு போர்ன்விடா தருவதினால், வளரும் வயதில் அவர்களுக்குத் தேவையான விசேஷ ஊட்டம் கிடைக்கிறது. ஆகவே நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி."



*போர்ன்விடாவின் இனிமைக்காலம். போர்ன்விடா அளித்தவரை பாசமனங்கள் நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்.*

OBM/5135/TAM




# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்.
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்,
தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு
பொடுகு, மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001**

எமது தைலம் கிடைக்குமிடங்கள் : 1. சேலம் — ரோசு மெடிக்கல்ஸ் 2. ஆத்தூர் — முத்து மெடிகல்ஸ், 3. நாமக்கல் — கஸ்தூரிபா மெடிக்கல்ஸ், 4. ராசிபுரம் — ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர் — ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ், 6. திருச்செங்கோடு — சீனிவாசா மெடிக்கல்ஸ், 7. தர்மபுரி — விஜயலஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி — கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ் 9. ஒசூர் — மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர் — பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள் 11. சென்னை-3 — ஹேமா மெடிக்கல்ஸ் 12. அமிஞ்சிகரை — வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம் — திருமகள் மெடிக்கல்ஸ் 14. காஞ்சிபுரம் — லஷ்மி மெடிக்கல்ஸ் 15. அரக்கோணம் — அகிலாம்பிகை மெடிக்கல்ஸ் 16. ஆரணி — பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை 17. திருவண்ணாமலை — அன்னை மெடிக்கல்ஸ் 18. வேலூர் (NA) — பாரத் மெடிக்கல்ஸ் 19. திருப்பத்தூர் (NA) — லஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம் — அன்பு மெடிக்கல்ஸ் 21. கள்ளக்குறிச்சி — A. ராஜீ நாட்டு மருந்துக்கடை 22. கும்பகோணம் — செல்வம் மெடிக்கல்ஸ் 23. தஞ்சாவூர் — சிட்டி மெடிக்கல்ஸ் 24. திருச்சி — சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் — தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம் — N. லஷ்மணன் மருந்துக்கடை 27. தேனி — ஆண்டாள் மெடிக்கல்ஸ் 28. மதுரை — குமார் மெடிக்கல்ஸ் 29. மதுரை — ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை) 30. ராமநாதபுரம் — பாத்மா மெடிக்கல்ஸ் 31. கானாகுடி — மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ் 32. விருதுநகர் — S.S.K. மெடிக்கல்ஸ் 33. தூத்துக்குடி - அன்பு மெடிக்கல்ஸ் 34. திருநெல்வேலி — கோமதி மெடிக்கல்ஸ் 35. பாளையங் கோட்டை — ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ் 36. நாகர்கோவில் — S. நல்ல பெருமாள் மருந்துக்கடை 37. தென்காசி — M.R. மெடிக்கல்ஸ் 38. ராஜபாளையம் — அரவிந்த் மெடிக்கல்ஸ் 39. சிவகாசி — சிவகாசி மெடிக்கல்ஸ் 40. கோவில்பட்டி — சாந்தி மெடிக்கல்ஸ் 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் — பாலாஜி மெடிக்கல்ஸ் 42. உடுமலை — ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ் 43. பொள்ளாச்சி — ராமநாதன் மெடிக்கல்ஸ் 44. கோவை — காசிநாத் அண்ட் கோ., 45. கோவை — திருமலை மெடிக்கல்ஸ், காந்திபுரம் 46. திருப்பூர் — கீதா மெடிக்கல்ஸ் 47. சிவகங்கை குணா & கோ (கெமிஸ்ட்) 48. கோபி — வாணி பார்மஸி 49. ஈரோடு — ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிகல்ஸ் 50. திருச்சி ஜங் — கபூரீ மெடிக்கல்ஸ் 51. புதுக்கோட்டை — மீனா பார்மஸி 52. திருவாரூர் — அன்ன பூர்ணா மெடிக்கல்ஸ் 53. மாயவரம் — ஸ்வாமி மெடிக்கல்ஸ் 54. சிதம்பரம் — ராஜா பார்மஸி 55. விருத்தாசலம் — ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை — பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம் — மீனாட்சி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிக்கல்ஸ் 60. நாமக்கல் — சரஸ்வதி மெடிக்கல் ஹால். 61. காரைக்குடி — சரோஜா ட்ரகஸ் ஸ்டோர்ஸ். 62. பாண்டிச்சேரி — ராஜா மெடிக்கல்ஸ். 63 சென்னை-4-மீனாட்சி மெடிக்கல்ஸ் 64. மதுரை-1 ப்ரவீன் மெடிக்கல்ஸ் 65. நாகை-ரங்கா ஸ்டோர்ஸ் 66. மைலாப்பூர் R.R. பார்மஸி 67. தி. நகர் கந்தசாமி ஸ்டோர்ஸ் (கெமிஸ்ட்) 68. சேலம் — காட்டுநாயக்கன் ஆப்பா மார்க்கெட் 69. கடலூர் — சிவா மெடிக்கல்ஸ் 70. வடபழனி — சிவகிரிஸ் டிரக ஸ்டோர்ஸ் & பார்மஸி 71. தஞ்சாவூர்-1 சிங்காரம் மெடிக்கல்ஸ் மார்ட்

---

"எமது நவரத்ன கல்ப லேகியம் சக்திக்கும் வலிமைக்கும் அனைவரும் சாப்பிடத்தக்க சிறந்த டானிக்; 1 புட்டி ரூ. 30/-. V.P.P. உண்டு. தபால் செலவு இலவசம். எமது ஸ்டாக்கிஸ்டுகளிடமும் கிடைக்கும்.

தன்னைத் தொடர்பு கொள்ளச் சொல்லி விட்டுத் தான் ஈரோட்டில் தங்கியிருக்கும் ஹோட்டல் ஃபோன் நெம்பரைக் கொடுத்துவிட்டு வருகிறார் நிருபர்.)

## காட்சி — 7

(இரவு சுமார் ஒன்பது மணி. கொடுமுடி போலீஸ் ஸ்டேஷனிலிருந்து கல்கி நிருபருக்கு டிரங்கால் வருகிறது.)

நிருபர்: எஸ். நான்தான் பேசுகிறேன். நீங்க யார் பேசறது?

ஃபோன் குரல்: நான் கொடுமுடி ஸ்டேஷன் ஹெட் கான்ஸ்டபிள் மனோகரன் பேசறேனுங்க. நீங்க சாயங்காலம் வந்துட்டுப் போனீங்களாம்! நாங்களெல்லாம் ஈரோடு கோர்ட்டுக்கு கேஸ் விஷயமாப் போயிருந்தோம். வந்தவுடனே சொன்னாங்க. உடனே உங்களுக்குப் ஃபோன் பண்றேன்.

நிருபர்: வேறொன்றுமில்லை. க்ரைம்நெம்பர் 58/85 அதுதான் விஜய சரஸ்வதி கொலை செய்யப்பட்டது தொடர்பாக உங்கள் தரப்பை விசாரிக்க வந்தேன். முதல் நாள் மாலை நாலரை மணிக்கே எப்.ஐ.ஆர். பதிவு செய்யப்பட்டும் மறுநாள் காலை வரை போலீஸார் டெட் பாடி பக்கம் போகவே இல்லையே ஏன்? பிறகு இன்னமும் கூட டெத் தானதற்கான ரெஜிஸ்ட்ரேஷனைச் செய்ய மறுக்கிறார்களாமே அது ஏன்? அதெல்லாம் போலீஸ் பக்முள்ள வீக் பாயிண்ட்னு நாங்க நினைக்கிறோம்.

ஹெட் கான்ஸ்டபிள்: மர்டர் நடந்த அன்னிக்கு ஈரோட்லே க்ரைம் மீட்டிங் இருந்த தனாலே நாங்களெல்லாரும் போய்ட்டோமுங்க. ஒரேயொரு கான்ஸ்டபிள்தான் ஸ்டேஷன்லே இருந்தாரு. அதோட எங்களுக்கு ஜீப், மோட்டார் பைக் போன்ற வண்டி வசதிகளும் இல்லீங்க. பின்னே எப்படீங்க உடனே போக முடியும்? டெத் ரெஜிஸ்ட்ரேஷன் பண்ணலேன்னா அதுக்கு நாங்க என்னங்க செய்ய முடியும்? அது வேறே டிபார்ட்மெண்டாச்சுங்களே.....

நிருபர்: நீங்க க்ரைம் மீட்டிங்குன்னு சொல்றீங்க. ஆனா யாரோ ஒரு மந்திரி ஈரோட்டுக்கு அப்போது வந்ததாகவும் அதற்கான பந்தோபஸ்துக்காகத்தான் அனைவரும் ஈரோட்டுக்கு வந்துட்டதாகவும் சொல்றாங்களே....

ஹெ. கா: ரெண்டுந்தாங்க.

நிருபர்: போலீஸ் நாயை வரவழைச்சு ஏன் துப்பறியலே?

ஹெ. கா: டெட் பாடி தண்ணிலே இருந்ததாலே டாக் வந்தாப் பிரயோஜனப்படாதுங்க. அதனாலதான் வரவழைக்கலே.

நிருபர்: பாடியை அந்த இடத்திலேயே போஸ்ட் மார்ட்டம் பண்ணியிருக்கீங்க. ஆனா கொடுமுடியிலுள்ள அரசாங்க ஆஸ்பத்திரி பக்கத்துலேதான் இருக்கு. இதுக்கு என்ன காரணம்? எதற்கு அத்தனை அவசரம்?

ஹெ. கா: நான்தான் மொதல்லேயே சொன்னேனுங்களே.... வெகிக்கிள் வசதி கிடையாதுன்னு. வாடகை வெகிக்கிள் வெச்சா நூறு இரு நூறுன்னு நாங்க எங்க பாக்கெட்லே இருந்துதாங்க குடுக்க வேண்டியிருக்கும்.



ஒருவர்: கல்யாணத்துல, நம்ப தலைவர், அவரோட மனைவிக்கு ஏன் பதில் மாலை போடவில்லை?

மற்றவர்: தலைவருக்கு எப்பவுமே வாங்கித்தான் பழக்கமாம்!

— எஸ்.ஏ. கோவிந்தகுமார்.

நிருபர்: அது சரி, அப்பவே அவசரம் அவசரமா டெட் பாடியைப் புதைக்க வேண்டிய அவசியம் என்ன? ஒரு நாளாவது காத்திருந்து பார்த்திருக்கலாமே!

ஹெ. கா: நாங்க பலபேரை விசாரிச்சுப் பார்த்திட்டுத்தாங்க பொதைச்சோம். டெட் பாடியோட அண்ணனே தனக்கு அடையாளம் தெரியலேன்னு கையெழுத்துப் போட்டா அப்புறம் எப்படீங்க? நாங்க என்னதான் செய்ய முடியும்?

நிருபர்: உண்மையில் அது அவுங்க பக்கமுள்ள வீக் பாயிண்ட்தான். ஆனா, ஏதாவது துப்புக் கிடைக்குதான்னு அவுங்க கேட்க வந்தா அதைச் சொல்லிச் சொல்லியே தட்டிக் கழிக்கிறீங்களாமே? ஒரு கிராமத்தில் நடந்த கொலையை ஒரு வருஷத்துக்கு மேலாகியுமா கண்டுபிடிக்க முடியலை? அதிசயமா இருக்கே!

ஹெ. கா: என்னங்க பண்றது. நாங்களும் முயற்சி பண்ணிக்கிட்டுதான் இருக்கோம். கொலைகாரனைத் தெரிஞ்சா விடுவோமுங்களா? இன்னமும் தேடிக்கிட்டுத்தாங்க இருக்கோம். கேஸையும் க்ளோஸ் பண்ணலேங்க. வெச்சுடட்டுங்களா? நன்றிங்க.

## காட்சி — 8

(கல்கி நிருபர் தான் முதல் நாள் விசாரித்த விவரங்களையெல்லாம் மறுநாள் கலெக்டரிடம் விளக்குகிறார். வெகிக்கிள் வசதி இல்லை என்ற போலீஸாரின் குறையைப் போக்கவும் முயல வேண்டும் என்று கலெக்டரிடம் சொல்லுகிறார் நிருபர். கலெக்டரும் குறித்துக் கொள்கிறார்.)

## காட்சி — 9

(இத்தனைக்குப் பிறகும் குற்றவாளி கண்டு பிடிக்கப்பட்டு தண்டிக்கப்படுவானா? அதுதான் மிகப் பெரிய கேள்விக்குறி. க்ளைமாக்ஸ் காட்சியைப் பொறுத்திருந்து தான் பார்க்க வேண்டும். வேறு வழியில்லை.)



# மாண்புமிகு முதலமைச்சர்

### சென்ற இதழ் சருக்கத்தின் சுருக்கம்

பின்னால் சேக்கிழார் என்று பெரும்புகழ் பெறப் போகும் இராமதேவர் குன்றத்தூரில் வசித்து வருகிறார். அந்தப் பேரறிஞரைத் தமது முதலமைச்சராக்கிக் கொள்ள விரும்பி அநபாய (இரண்டாம்) குலோத்துங்க சோழன் தூது அனுப்பி ஏமாற்றமே அடைகிறான்.

ஒற்றர் மூலம் இதை அறிந்த பாண்டியன் மாறவர்மன் சீவல்லபன், அதே இராமதேவரை பாண்டிய நாட்டின் முதலமைச்சராக்கிவிட்டால் சோழனைப் பழி வாங்கியது போலவும் ஆகும். அதே நேரத்தில் இன்று சோழருக்குத் இறை செலுத்தும் நிலையில் உள்ள பாண்டிய நாடு நாளை தன் பழம் பெருமையைத் திரும்பப் பெறவும் இராமதேவர் உதவலாம் என்று திட்டமிட்டு ஆடலரசி ஜோதியை தூது அனுப்பத் தீர்மானிக்கிறான்.

சிவன் கோயில் முன்பு மட்டுமே தன் கலையை அரங்கேற்றுகிறவள் ஜோதி. அந்தச் சிவ நேயத்தால்தான் மற்றொரு சிவநேயத்தை ஆட்கொள்ள முடியும் என்று கணக்குப் போடுகிறான் பாண்டியன். சிவத் தொண்டர்களின் வரலாறு அறிந்து ஆடஇட்டமிட்டுள்ள ஜோதி அதற்காகவும் மன்னருக்காகவும் இராமதேவரைச் சந்திக்கச் சம்மதிக்கிறாள். ஆனால் கூடவே, ''உங்களுக்காக முயல்வேன்; ஆனால் எனக்காகத்தான் வாழ்வேன்! என் கதை, எந்த நாட்டில் எப்படி எழுதப்படுமோ தெரியாது'' என்கிறாள்.

இதனால் மாறவர்மன் சீவல்லபன் மனக் குமைச்சலுடன் புறப்படுகிறான்.

### சருக்கம் 2

## தமிழுக்குச் சிறப்பு!

ஒரு மங்கலத் திருநாளில் புறப்பட்ட முத்துப் பல்லக்கு, தொண்டை நாட்டுப் பாலாற்றைக் கடந்து கொண்டிருந்தது.

பல்லக்கினுள், 'வெட்டுதற்கோர் ஒட்டக் கூத்தனில்லையே! கண்டவனெல்லாம் எழுது கோலைப் பற்றிக்கொண்டு புலவர்கள் என்று திரிகிறார்களே!'' என்று பிற்காலத்தவர் எண்ணிப் பூரித்த புலவர்ச் செம்மல் ஒட்டக் கூத்தர் அமர்ந்திருந்தார்.

அரங்கேற்றப் போகும் 'குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ்' ஓலைச் சுவடி கையிலிருந்தது.

துணைக்கு எந்த அரசியல் அதிகாரிகளையும் கொண்டு வரவில்லை. நூறு வீரர்களே போதும்என்று குன்றத்தூர் நோக்கிப் பயணப் பட்டுவிட்டார்.

இதுவரை எந்த நூலை அவர் அரங்கேற்றியிருக்கிறார்? தமது நூலுக்கு எவன் பாராட்டுத் தேவை? எவன் அத்துணைக்குப் புலமை பெற்றிருக்கிறான்?

கலைமகளின் அவதாரம் என்றும் கலைமகளின் கனிந்த வாழ்த்துப் பெற்றவரென்றும் நாடே சொல்லுகிறபோது....

ஆயினும் இந்த அரங்கேற்றம் அவசியப்




ட்டது.

எப்படியும் குன்றத்தூர் இராமதேவரை முதல் அமைச்சராகக் கொள்ள வேண்டும் என்று குலோத்துங்க சோழன் பிடிவாதமாக இருக்கிறபோது.....

அவர் சற்றே இறங்கி வந்தாலும், ஒரு தமிழை யாசிக்க இன்னொரு தமிழ் இறங்கு வதில் தவறில்லை.

தமக்குத் தமிழும் சமஸ்கிருதமும் மட்டுமே தெரியும்!

ஆனால் இராமதேவருக்கு....

தமிழ், சமஸ்கிருதம், இசை, நாடகப் பண்பு, இவை எல்லாவற்றையும்விட அரசி யல் ஞானம்..... சரித்திர ஞானம்.....

ஏதோ சிறு சிறு கவிதைகளைச் செவி சாய்க்க நேர்ந்தது. பிற்காலத்தில் இதே இராம தேவர் பெருங்காப்பியம் படைக்கமாட்டார் என்பது என்ன நிச்சயம்?

தொண்டை நாட்டு மக்களிடையே பெருஞ் சிறப்புப் பெற்றவர் என்றால்....

மக்களை நன்கு புரிந்து கொண்டவர்; மக்க ளோடு மக்களாகப் பழகத் தெரிந்து கொண்ட வர்; மக்களுக்குத் திலகமாய்த் திகழ்கிறார் என்றால்....

அறிவு வேறு; அரசியல் வேறு. இரண்டுமே ஒன்றானால்.....

அது இராமதேவர். இவர் ஏன் சோழ நாட்டு மக்களைப் புரிந்து மயக்கி அரசியல் நடத்த மாட்டார் என்பதுதானே மன்னனு டைய கேள்வி; எதிர்பார்ப்பு....

இப்பேர்ப்பட்டவரை நேரில் கண்டு ஒரு தமிழ்ச் சதுரங்கமாடி வெல்ல நினைப்பதில் எந்தவிதத் தாழ்வும் கிடையாது.

தமிழின் கொட்டு முரசான ஒட்டக்கூத்தர் வருகிறார் என்று கேள்விப்பட்ட குன்றத்தூர் மக்களே திரண்டு வருகிறார்கள்.

சோழப் பேரரசுவின் அவைக்குரவர்; குலோத்துங்கச் சோழ மாமன்னருடைய ஆசானுயிற்றே!

இராமதேவரின் தம்பி பலவருவாயன் வீட்டினுள் விரைந்து நுழைந்து, "அண்ணா! ஒட்டக்கூத்தர் பெருமான் நமது இல்லம் நாடி வந்து கொண்டிருக்கிறார்!" என்று மூச்சு வாங்கக் கூறி முடிக்கிறான்.

அதுவரை 'சீவக சிந்தாமணி'க் காப்பியத் தில் தமது ஜீவனை ஐயக்கம் செய்து, ஜீவ கனுடன் தொடர்பு கொண்டிருந்த இராம தேவர், வாசவதத்தையை வீணை வாசிக்க விட்டு வெளியே ஓடி வருகிறார்.

அதோ தெருவில் கூட்டம்.

ஓடோடிச் செல்கிறார்.

ஒரு தமிழை இன்னொரு தமிழால்தான் புரிந்து கொள்ள முடியும் என்பது போல அவரது அங்கமெலாம் துடித்து அறிவெலாம் வியர்த்துக் கொட்டுகிறது.

'தக்கயாக பரணி'யையும் 'விக்கிரம சோழன் உலா'வையும் தமிழுக்கும் தரணிக் கும் தந்த புலவரேறுவல்லவா வருவது?

ஓடோடி வருபவர்தான் இராம தேவர் என்பதை மக்கள் மூலம் அறிந்து கொண்ட ஒட்டக்கூத்தர், உடன் பல்லக்கை இறக்கச் சொல்கிறார்; இறங்கிய பல்லக்கை விட்டுத் தாமும் இறங்கி, தமது வயதையும் பாராமல் எதிர் கொண்டு ஓடுகிறார்.

ஓ..... இதுதான் தமிழுணர்வோ? அறிவைப் புரிந்து கொள்ளும் உண்மையான அறிவின் முகவரியோ? அகவரியோ? செவி களையும் கண்களையும் உடைய முகவரியோ?

இருவரும் நெருங்கிச் சங்கமித்து அணைத் துக் கொண்டு, 'தமிழே! தமிழே!' என்று முனகிக் கொண்ட காட்சி.....

தமிழ் வளர்ந்த தாரக மந்திரம் புரிபடுவது போலத் தெரிந்தது.

வெகு நேரத்துக்குப் பிறகு இரு தமிழ்ச் சுகமும் அணைப்பிலிருந்து விடுபட்டு ஒன்றை யொன்று காப்பிய நயத்துடன் நோக்கிக் கொள்கின்றன.

ஆண் பெண் காதல் சுகத்தை விட

மேலானது. அழியாதது அருந் தமிழ்க்காதல் சுகமாயிற்றே!

''கூத்தர் பெருமானே நலமா?''

''தமிழ் நலமாக இருக்கிறவரை நமது நலத்துக்கு என்ன குறைச்சல்?''

இராமதேவருக்கே உரிய பிறை நிலாச் சிரிப்புடன் கவனிக்கிறார். பெண்களுக்குத் தான் பிறை நிலாச் சிரிப்புச் சொந்தமா என்ன? பிரபை கட்டிய பேரழகு படைத்த ஆண்களுக்கும் உண்டே!

இராமதேவரின் பொன்னிற மேனி, கூத்தரைப் பிரமிக்கச் செய்கிறது.

இராமதேவர் அழைக்க, அவரைப் பின் தொடர்ந்து கூத்தர் செல்கிறார்.

விசாலமான நிலத்தில் சுற்றிலும் தென்னையும், மாமரங்களும் பலா மரங்களும் பசுமை பொழிய, நடுவே அந்த ஓடு வேய்ந்த வீடு.

வீட்டில் நுழைகிறபோது ஒட்டக்கூத்தரின் பாதம் பணிந்து வரவேற்கிறான் பாலறுவாயன்.

''யார் இராமதேவரே இவன்?''

''உடன் பிறப்பு; பெயர் பாலறுவாயன்; வில், வேல், வாள், பயிற்சியில் மாவீரன்.''

''ஓகோ! வீரம் செறிந்த இவனுக்கு வீரப்பன் என்றே பெயரிட்டு இருக்கலாம். பாலறுவாயன் என்பது என்னவோ போலிருக்கிறது.''

இருவரும் சிரித்துக்கொண்டே வீட்டினுள் நுழைகிறார்கள்.

இராமதேவரின் அன்னை வணங்கி வரவேற்கிறாள். ஒரு சத்தியத் தாயின் வரவேற்பு போல அது இருந்தது.

''என்னைப் பெற்றெடுத்த அன்னை.''

ஒருகணம் உற்று நோக்கிய ஒட்டக்கூத்தர், அந்த அன்னையின் இரு கரங்களையும் பற்றிக் கொண்டு, கண்களில் ஒற்றிக் கொண்டு, ''தாயே! உங்களைத் தமிழுலகம் மறவாது. ஒரு முத்தமிழ் வித்தகரை, வரலாற்றுப் பேராசிரியனை, அரசியல் ஞானியைப் பெற்ற மணி வயிற்றை வணங்குகிறேன்!'' என்றார்.

அட, செருக்கின் செம்மாப்பு நிறைந்த ஒட்டக்கூத்தரா இப்படிப் பேசுகிறார்? அவர் பேசவில்லை; அவரது தமிழ் பேசுகிறது.

மீசையை நீவிவிட்டுக் கொண்ட ஒட்டக் கூத்தர், மீசையற்ற நிலா முகமான இராம தேவரைக் கவனித்து, ''என்ன இராம தேவரே! ஒட்டக்கூத்தனை இப்படிப் பேசுவது என்று நினைக்கிறீர்களா? பிடரியின் அருமை சிங்கத்துக்குத் தெரியாது; அதுபோல உங்கள் அருமை உங்களுக்குத் தெரியவில்லை'' என்றார்.

இருவரும் இருக்கைகளில் அமருகிறார்கள்.

அன்னை கொண்டு வந்த மோரைப் பருகுகிறார் ஒட்டக்கூத்தர்.

''வேளான்குடி வேந்தரே! நான் வந்த செய்தி பற்றிப் பேச நினைக்கிறேன். மனமு

வாசகர் பங்கு அடுத்த இதழில் இடம் பெறும்...

வந்து ஒப்புக்கொள்ள வேண்டும். ஏனென்றால் வந்தவன் ஒட்டக்கூத்தன்.''

இங்கேதான் செருக்கின் செம்மாப்பு சற்றே குடுமியைத் தட்டி முடிக்கிறது.

இராமதேவரும், ''முதலமைச்சர் பதவியைத் தவிர வேறு ஏதேனும் பேச வேண்டுகிறேன்'' என்றார்.

''அவரவரும் முதலமைச்சர் பதவி கிடைக்காதா என்று நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு சூழ்ச்சி செய்கிறபோது நீங்கள் வெறுப்பது விசித்திரமாக இருக்கிறது.''

''நீங்கள் போதுமே!''

''நான் தமிழறிவேன்; அரசியல் அறியேன்!''

''எனக்கு மட்டும் அப்படி என்ன அரசியல் தெரியும் என்று நினைக்கிறீர்கள்?''

''எவன் நிஜமான அரசியல்வாதி தெரியுமா? மக்களையுணர்ந்தவன்; மக்கள் நாடியைக் கைபிடித்துப் பாராமலேயே அறிந்து கொள்பவன். தொண்டை மண்டலத்து மக்கள் உங்கள் பெயரைக் கேட்டாலே இந்த மண் தந்த இதய தெய்வம் என்கிறார்கள். 'இராம' என்ற எழுத்துக்களையே மராமர மந்திரமாக எண்ணி தேவபூசை புரிகிறார்கள். ஒருசமயம் கல்வெட்டு ஆராய்ச்சிக்காகத் தமிழகத்தையே நீங்கள் சுற்றி வருகிறபோது, உங்கள் அன்பான அரவணைப்பைக் கண்டு, 'இவர் சோழநாட்டில் பிறந்திருக்கக்கூடாதா?' என்று மக்கள் பெருமூச்சு விட்டது சோழ மன்னன் காதுகளுக்கு வந்தது. மக்களிடம் நீங்கள் பேசிய பேச்சைக் கேட்டு மயங்காதார் யார்? உங்களிடம் ஆண்மையழகு இருக்கிறது; அறிவழகு இருக்கிறது; கலையழகு இருக்கிறது; அரசியல் அறிவு, அழகு இருக்கிறது. சில இடங்களில் பெண்களை மயங்கினார்களாமே!''

''சிவ சிவ!''

''சிவனே கங்கையை நோக்கியவன் தான்!''

''வந்த விஷயம் பேசலாமே!''

ஒட்டக்கூத்தர் யாப்பிலக்கணமாய்ச் சிரித்துக் கொள்கிறார்.

அன்னை குறுக்கிட்டாள்.

''ஏண்டா, ராமதேவா! வந்தவர் சற்றே களைப்பாறி உண்டு முடித்த பிறகு பேசக் கூடாதா?''

ஒட்டக்கூத்தர் மறுமொழி பகர்ந்தார்: ''தாயே! நான் வந்த செயல் நிறைவுமானால், இரவு தங்கி, உண்டு உறங்கி நாளை பயணம் மேற்கொள்வேன்.''

''செய்தியைச் சொல்லுங்கள், செங்குந்தர்ச் செல்வமே!''

''நான் மன்னன் குலோத்துங்கன் மீது பிள்ளைத் தமிழ் பாடி இருக்கிறேன். அதன் அரங்கேற்றத்துக்கு நீங்கள் தலைமையேற்று வாழ்த்தியருள வேண்டும்.''

''கவிராட்சசரே! நீங்கள் எங்கே? நான் எங்கே? அறிவில் மட்டுமல்லாது வயதாலும், ஐம்பது எங்கே? முப்பது எங்கே?''

''என் காலத்தில் ஞானசம்பந்தர் பெருமான் 'தோடுடைய செவியன்' பாடி இருப்பா



## அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி— புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதனால்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, கமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்குமேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்வழிகளில் செயல்படுகிறது.



வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.



சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேஷ மருந்துக் கலவை கொண்டது.



சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையோடும் வைத்துக் கொள்கிறது, அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM



## தாய்ப்பால் ஊட்டுவது உங்களது குழந்தைக்கு ஆகாரச்சத்தைவிட அதிக சத்தை அளிக்கிறது. குழந்தைக்கு உணர்ச்சி பூர்வ பாதுகாப்பையும் தருகிறது.

தாய்ப்பால் ஊட்டுவது தாய்க்கும் குழந்தைக்கும் உள்ள பாசப் பிணைப்பை நேச உணர்வை மேலும் வலுவாக்குகிறது. ஆம்! இயற்கையாகவே தாய் அன்பை வெளிப்படுத்தும் வழியே இதுதான். அதனால் குழந்தை மன நலத்தோடும் மகிழ்வோடும் வளர்கிறது.

தாய்ப்பால் குழந்தைக்கு ஏற்ற சரிவிகித உணவாகும். அதில் குழந்தைக்கு தேவையான புரதச்சத்துக்கள் அனைத்தும் தேவையான விகிதத்தில் அடங்கியுள்ளது.



தாய்ப்பால் ஊட்ட தவறாதீர்கள். இயற்கையின் நியதி அது. உங்கள் குழந்தையின் விருப்பமும் அதுவேதான். தவிர்க்க முடியாத காரணங்களால் தாயின் உடல் நலம் பாதிக்கப் பட்டாலோ அல்லது தாய்ப்பால் குறைந்து விட்டாலோ—விஜயா ஸ்ப்ரே பயன்படுத்துங்கள். பரிசோதிக்கப்பட்ட மற்றும் நம்பகமான குழந்தை உணவு.

விஜயா ஸ்ப்ரே அடைக்கப்பட்டுள்ள டின்களில் உங்கள் குழந்தைகளின் உடல் நலம் காக்கும் ஆலோசனைகள் தரப்பட்டிருக்கின்றன. அவற்றை கவனத்தில் கொண்டு குழந்தையின் உடல் நலத்தை பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

குழந்தைகளின் நலனில் அக்கறை கொண்டு வெளியிட்டோர்:
விஜயா ஸ்ப்ரே தயாரிக்கும் ஆந்திர பிரதேஷ் டெய்ரி டெவலப்மெண்ட்
கோ ஆப்பரேடிவ் பெடரேஷன் லிமிடெட்.



பிச்சைக்காரன்: ஹலோ.....! யாரு. அம்மாங்களா? நான் ராப்பிச்சை பேசறேம்மா! உங்க தெருவுக்கு வர 'லேட்' ஆகும் போல இருக்கு. சாப்பாட்டை ஃப்ரிஜ்ஜில வச்சுடுங்க! காலைல வந்து வாங்கிக்குறேன்! ஓ.கே.!

— எஸ்.ஏ. கோவிந்தகுமார்.

ரேயானால், மூன்று வயதுச் சிறுவன் என்றும் பாராமல் தலைமை ஏற்கச் செய்திருப்பேன்."

அக்கணமே ஒப்புக் கொண்டார் இராம தேவர்.

அன்றிரவு தமிழிரவாய்ப் பூத்தது.

தமிழ்ச் செல்வர் இராம தேவரை அழைத்துக் கொண்டு கங்காபுரியுள் பிரவேசிக்கிறார் ஒட்டக்கூத்தர் என்கிற செய்தி, காற்றில் தேன் கலந்து தித்திக்கத் தித்திக்கப் பரவுகிறது.

சோழ மாமன்னன் குலோத்துங்கன், சற்றும் கால தாமதம் செய்யாது பட்டத்து யானையில் அமர்ந்து, அரச வாத்தியங்கள் முழங்க பரிவாரங்களுடன் வரவேற்கப் புறப்படுகிறான்.

கோட்டையின் வரவேற்பு முரசம் தலைநகர் முழுவதும் கேட்குமாறு கொட்டத் தொடங்குகிறது.

ஒரே பல்லக்கில் பயணம் செய்து வந்த ஒட்டக்கூத்தரும், இராம தேவரும் மன்னன் வருகை கண்டு பல்லக்கை விட்டு இறங்கிக் கொள்கிறார்கள்.

பட்டத்து யானையைவிட்டுக்கீழே இறங்கிய சோழ மன்னன் குலோத்துங்கன் கண்களில் நீர் மல்க, கரங்களில் சீர் நல்க, பூரித்து வணங்கி, "தமிழே வருக! மக்கள் தலைவனே வருக!" என்று வாயினிக்க, மெய்ச்சிலிர்க்க வரவேற்கிறான்.

"பூவிரி சூழ் காவிரியைப் புரந்த குலம், புண்ணிய குலம்! அந்த வான்விரியும் ஒளிச் சுடரோன் வழிவந்த செம்பியரே! வணக்கம்; வணக்கம்; வணக்கம்!" என்று தலை பணிந்து வணங்குகிறார் இராமதேவர்.

விரிந்த கண்களும் வியந்த பார்வையுமாக நோக்குகிறான், சற்றே கரிய நிறம் கொண்ட குலோத்துங்கன்.

ஆ! இராமதேவரா? இல்லை அந்த இராமச் சந்திர மூர்த்தியே பிரசன்னமான தேவ அழகா?

"இராமதேவரே! அது ஏன் வணக்கத்தை மும்முறை சொன்னீர்கள்?" என்றான் குலோத்துங்கன்.

இராமதேவர் நாவசைந்தது:

"ஒன்று எந்தை முக்கண்ணனுக்கு; அடுத்தது தமிழுக்கு; மூன்றாவது சோழ நாட்டுக்கு!"

சோழ நாட்டுக்கு......

மன்னனுக்கு என்று சொல்லாமல் சோழ நாட்டு மக்களுக்கு என்று கூறிய பாங்கு....

மன்னனும் சோழ நாட்டின் ஓர் அங்கம் தானே?

ஓ..... இதுதான் பிரகாசமான அரசியல் அறிவோ?

மெய்ச்சிலிர்த்துப் போனான், பொய்ச் சிலிர்க்காப் புரவலன் அனபாயன்.

"மன்னா! நீங்கள் பட்டத்து யானையில் முன்னே செல்லுங்கள். நாங்கள் பல்லக்கில் பின்னே வருகிறோம்!"

"நான் உயரத்தில் வருவதா! அவ்வளவு உயர்ந்தவனா? சாதாரண மன்னன். அசாதாரணமான தமிழ் மன்னர்களான நீங்கள் பல்லக்கில் வர, நான் யானையின் உயரத்திலிருந்து உங்களைக்கீழ்நோக்கிப் பார்ப்பதா? நீங்கள் அண்ணாந்து பார்க்கப்படவே பிறந்தவர்கள்! ஆகவே, நீங்களிருவருமே பட்டத்து யானையின் அம்பாரியில் அமர்ந்து வருகிறீர்கள்."

என்ன கொடுமை இது?

"மன்னா!" என்று அலறித் துடித்துப் போனார் அருந்தமிழே அவதாரம் எடுத்த இராமதேவர்.

"அருள்கூர்ந்து எனது வேண்டுதலை ஏற்றுக் கொள்ளுங்கள். தயவு செய்து மறுக்க வேண்டாம்!"

சுற்றியிருந்த அரசு அதிகாரிகளும் மக்களும் ஆச்சரியம் கண்களில் அம்மானை விளையாடக் கவனிக்கிறார்கள்.

வேறு வழியின்றி புலவர்கள் இருவரும் பட்டத்து யானையில் அமர்ந்த காட்சி சரித்திரத்துக்கே ஒரு புதிய காட்சியாகத் தெரிந்தது. இதைவிட இந்தச் சரித்திரத்துக்கு மகுடம் வைத்தது....

யானையின் மேல் பாகன் அமர வேண்டிய இடத்தில் அனபாயன் அமர்ந்து அங்குசம் ஏந்தியதுதான்.

என்னே வியப்பு.....?

ஓ..... பாண்டியர் சங்க காலத்தில் தமிழ் வளர்த்தார்கள். சோழர் இந்தத் தங்க காலத்தில் தமிழை வளர்க்கிறார்கள் என்கிற பெருமையை உலகிற்குக் காட்டத்தானோ?

எங்கும் வாழ்த்தொலிகள் எழுந்து வானைக் கிடுகிடுக்கச் செய்கின்றன.

அரண்மனையை அடைகிறபோது, இக்காட்சியைக் கண்ட பட்டத்தரசி தியாகவல்லியும் இரண்டாம் தேவி முக்கோக்கிழானடியும், 'ஆ! எங்கள் குலத் தமிழே! என்றுமுள தமிழே! இனி உனக்கு என்ன குறை?' என மெய்சிலிர்த்து நோக்கி வணங்குகிறார்கள். அவர்களிடையே இருந்த இளவரசன் ராசராசன் ஐம்படைத் தாலியணிந்த கோலமுடன் புரிந்தும் புரியாமலும் நோக்குகிறான்.

திடுமென்று பட்டத்து யானை துதிக்கையை வானோக்கி உயர்த்திப் பயங்கரமாகப் பிளிறத் தொடங்கியது.

(தொடரும்)



• கன்னிகா பரமேஸ்வரி ஆலயம்




• நினைவு ஸ்தூபி

ஊரை ஒட்டிக் கொண்டு போகும் பவானி ஆறு; நெருக்கமான கடைத் தெரு; அதில் வேக மாகச் செல்லும் 'ஜீவா'க்கள் (ஜீவா பஸ்கள்தான்.)

ஈரோட்டிலிருந்து கிட்டத்தட்ட 55 கி.மீ. தூரத்தி லுள்ளது 'சத்தி' என்றழைக்கப்படும் சத்தியமங் கலம். இது பெரியார் மாவட்டத்தின் எல்லையில் மைசூர் போகும் வழியில் மேற்குத் தொடர்ச்சி மலையின் சரிவில் உள்ளது.

பவானி சாகர் அணை கட்டும்போது (சத்தி யிலிருந்து பவானி சாகர் அணை 10 கி.மீ.தான்) ஊரின் நடுவில் சுதந்திரப் போராட்டத் தியாகி களின் நினைவாக ஒரு ஸ்தூபியைக் கட்டிக் கடி காரம் ஒன்றை அதில் பதித்தார்கள். வெகு நாட்க ளாக (ஆண்டுகளாக?) அந்தக் கடிகாரம் ஓட வில்லை. இதைப் பார்த்த 'சத்தி லயன்ஸ் கிளப் பினர் அந்தக் கடிகாரத்தை ரிப்பேர் செய்து ஓட விட்டார்கள். 'சமூக சேவை செய்யும் ஸ்தாபனம்; தற்பெருமையெல்லாம் அதற்குத் துளியும் இருக் காது' என்று நீங்கள் கருதினால், ஸாரி......

கடிகாரத்தைச் சரிப்படுத்தியவர்கள், அந்த ஸ்தூபியையே தாங்கள்தான் கட்டியது போன்று ஆங்கிலத்தில் மிகப் பெரிய அளவுக்கு ஒரு போர்டு வைத்தவுடன் முழித்துக் கொண்டார்கள் சில இளைஞர்கள். சில நாட்கள் போராடியதற்கு பிறகு போர்டு மாற்றப்பட்டது. அப்போதும் கடிகாரத்தை நிறுவியது தாங்கள்தான் என்பதுபோல் பெயர் போட்டுக் கொண்டு பெருமையை சேர்த்துக் கொண்டது லயன்ஸ் கிளப்.

கடைத் தெருவில் உள்ள முக்கியமான கோயில் கன்னிகா பரமேஸ்வரி கோயில். இந்தக்கோயிலுக்

# சத்திய மங்கலமே



* கீரைக்காரர் சுடுகாடு



* அரசு மருத்துவமனை



* நல்லசாமி

குப் பக்கவாட்டிலும் வாசல் உண்டு. ஆனால் பக்கவாட்டில் உள்ள தெரு நடைபாதைக் கடைகளால் ஆக்ரமிக்கப்பட்டு கோயிலுக்கு உள்ளே போக முடியாத நிலை. அதனால் ஏற்படும் நெருக்கமான ஜனநடமாட்டமும் விபத்துக்களும் ஏராளம். இந்த இடைஞ்சலைப் புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள நகராட்சித் தலைவராவது, போக்குவாரா என்று கேட்கிறார் 'சத்தி'யைச் சேர்ந்த எஸ். எம். நல்லசாமி.

எந்த ஊரில் தான் ஆஸ்பத்திரி ஒழுங்காக இருக்கிறது? சரி, இந்த ஊரில் மட்டும் என்ன வாழ்ந்துவிடப் போகிறது என்று மருத்துவமனைக்குள் நுழைந்தோம். "டூட்டி டாக்டர் எங்கே?" என்று கேட்டபோது பெரும்பாலான ஊர்களில் உள்ள மருத்துவமனைகளில் சொல்லப்படும். "வீட்டில்" என்று வழக்கமான பதில் கிடைத்தது.

"அது சரி, புது ஆஸ்பத்திரி கட்டுகிறார்களாமே?" என்று நல்லசாமியை விசாரித்தோம்.

"ஆமாம் ஸார். ஊருக்குச் சற்றுத் தொலைவில் கட்டுகிறார்கள்...." என்று நம்மை அழைத்துக் கொண்டு போய்க் காட்டினார்.

சத்தி – அத்தாணி சாலையில் நான்கு கி.மீ. தூரத்தில் புதிய ஆஸ்பத்திரி கட்டி முடிக்கப்பட்டு இருக்கிறது. ஊருக்கு ஒதுக்குப்புறத்தில் கட்டிவிட்டார்களே என்பது 'சத்தி' நகரவாசிகளின் குறை. நகருக்குள்ளேயே இருக்கும் பழைய ஆஸ்பத்திரியில், டூட்டி நேரத்தில் டாக்டர் இல்லாதபோது, இப்படி ஒதுக்குப்புறத்தில் மருத்துவமனையைக் கட்டினால் நிலைமை எப்படி இருக்குமோ யார் கண்டது?

ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பி வரும்போது சாலையின் இருபுறங்களிலும் மயானங்கள் இருந்தன.

"ஸார் இது கவுண்டர் சுடுகாடு. இது கீரைக்காரர் சுடுகாடு. இது வெத்தலைக்காரர் சுடுகாடு....." என்று சொல்லிக் கொண்டே வந்த நல்லசாமியிடம், "ஹரிஜனங்களுக்கு எங்கே ஸார்?" என்று கேட்டபோது, "அதோ அந்த ஓடையின் பக்கத்தில்தான்....." என்று ஓர் இடத்தைக் காட்டினார்.

ஓர் ஊரில் நான்கு சுடுகாடுகளா? செத்த பிறகும் கூடவா இந்த ஜாதிச் சனியன் இந்த மானுடத்தைவிட்டு அகலவில்லை? 'இல்லை' என்பதற்கு சத்தியமங்கலமே ஒரு சாட்சி.

சத்தியமங்கலத்தின் இத்தனை அவலங்களுக்கு இடையிலும் ஒரு வேடிக்கை: கடம்பூர் மலைப் பகுதியில் வாழும் மலைவாழ் மக்களுக்கு, 'மலைவாழ் மக்கள்' பட்டியலில் சேர்த்துச் சலுகைகள் தராமல், 'பிற்பட்டோர்' பட்டியலில் சேர்த்துத்தான் அரசு சலுகைகள் தருகிறதாம். ஆனால் சேலம் மாவட்டத்திலுள்ள கொல்லிமலையில்வாழும் இந்த மலைவாழ் மக்களின் உறவினர்களை மட்டும் 'மலைவாழ் மக்கள்' பட்டியலில் சேர்த்து சலுகைகள் கொடுத்துக் கொண்டிருக்கிறதாம் அரசு. இது எப்படி இருக்கு?

# சாட்சி!

— எஸ். பி. எம்.

# மல்லிகாவும் சில

மேலாண்மை

கும்பலாகவே அவர்கள் பஸ்ஸை விட்டு இறங்கினார்கள். ஆணும், பெண்ணுமாய் ஏழெட்டு உருப்படிகள். குழந்தைகள். வெற்றிலை சிவப்பும், சிரித்த முகமும் ஏதோ சுப காரியம் என்று சொல்லிற்று.

"யார் வீட்டுக்கு?" என சுந்தரத்தின் மனத்தில் கேள்வி எழும்ப, முக்கடைப் பேப்பரில்கவாரஸ்யமாகஎதையோபடித்துக் கொண்டிருந்த பொன்னுச்சாமி நிமிர்ந்து பார்த்துவிட்டுச் சொன்னான்.

"நம்ம மல்லிகா வூட்டுக்காத்தான் இருக்கும். அதப் பொண்ணுப் பாக்கத்தான் யாரோ வர்றதாப் பேசிக்கிட்டாக..."

சுந்தரத்திற்கு மட்டுமல்ல. அங்கிருந்த எல்லோருக்குமே அது ஆச்சரியமான செய்தி. கல்யாணமா? மல்லிகாவுக்கா?

"ஏலே..... நெசந்தானா?" காளியப்பக் கவுண்டருக்குத் தன்னைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

"பின்னே பொய்யா..... நீ வேணா பாரு பெரியவரே, இன்னும் பத்து நாள்ல உம்ம வீட்டுக்குப் பத்திரிகை வருதா இல்லையான்னு....."

"அட எழவே....." என வாயசைத்தார் அவர்.

கிராமத்தின் மற்ற பெண்களைப் போல தகப்பன் பெயரைச் சொல்லி மல்லிகாவைத் தெரிய வேண்டியதில்லை. கேட்டவுடன் 'ஜிர்' ரென்று போதை உண்டாக்குகிற பெயர் அது. நாலு பேர் கூடுகிற இடத்தில் அவளைப் பேசாத நாள் ஏது?

"ஏலே..... இன்னிக்கு அது போன தினுசைக் கவனிச்சியா?"

"கவனிக்காம என்ன..... தலை நிறையப் பூ. பந்தயக் குதிரை நடை. மச்சான் 'வர்றேன்'னு சொல்லியிருப்பானோ என்னமோ...."

"குடுத்து வச்சவன் அனுபவிக்கிறான்; உனக்கு என்னடா வந்திச்சு...."

என்ன கண்றாவியோ. அவளையும் அவளது அக்கான் புருஷனையும் சம்பந்தப் படுத்தி ஊரில் பேச்சு இருந்தது. இத்தனைக்கும் அவன் அட்டைக் கறுப்பு, வளைந்த முதுகு. கெந்திக் கெந்தி நடப்பான். வருமானம்கூட சுமார்தான். மாட்டுத் தரகு தொழில். மனைவிக்கே சோறு போட முடியாமல் வருஷத்திற்கு நான்கு மாதம் தகப்பன் வீட்டுக்கு அனுப்புகிறவன் கொழுந்தியாளை வைத்துக் கொள்வானா? அவள்தான் எந்தக் கவர்ச்சியைக் கண்டு மயங்குவாள்?

இருந்தாலும் ஊர் ஒரே கட்சியாக அதைச் சாதித்தது.

"அந்தப் பய பெண்டாட்டிய இங்க ஏன் அடிக்கடி அனுப்பறாங்கிறே.... அதே சாக்கில் இவளையும் பாக்க வரலாம்னுதான்...."

பஸ் போய்விட்டது.

புழுதியைக் கையால் விசிறியபடி, கும்பல் முக்கடைப் பக்கம் வந்தது.

"ஏனுங்க.... மயில்சாமிக் கவுண்டர் வூட்டுக்கு எங்கிட்டுப் போகணும்?" அவர்களில் தலைமையான ஆள் கொஞ்சம் தயங்கி விட்டுக் கேட்டார்.

மற்றவர்கள் கழுத்தை வளைத்து வளைத்து ஊரைச் சுற்றிப்பார்த்துக்கொண்டிருந்தனர். நெருங்கிய பந்துக்களுடன் இப்படி பஸ் ஏறி வந்து, புது இடத்தில் நிற்பது உற்சாகமான சங்கதியாக இருக்க வேண்டும். முகத்தில் சம்பந்தி தோரணையும், இந்த ஊரை ஜெயிக்கப் போகிற ஆளுமையும் தெரிந்தது. ஆனால் அடிப்படையில் அப்பாவி முகங்கள்தான் அவை. நறுக்கு மீசை வைத்த வாலிபன்



# சலசலப்புகளும்...

நிறைய எண்ணெய் தேய்த்துத் தலை சீவி, கை மடித்த சலவை டெரிகாட்டன் சட்டை அணிந்து 'நறுவிசாக' இருந்தான். அவன் மாப்பிள்ளையா?

டீக்கடை மாணிக்கத்திற்கு அவர்களிடம் விஷயம் கறக்கிற எண்ணம்.

"எந்த மயில்சாமி?" என ஒன்றும் தெரியாதவனைப் போல் கேட்டான்.

"அதான்..... பருத்தித் தோட்டக்காரு.... கொமார பாளையத்துல பொண்ணுக் குடுத்திருக்காரே..... அவரு."

"அடடே, நம்மாளு. இந்தா, இப்படியே வடக்க போயி அவத்துல வேப்பமரம் நிக்கிதே அதுக்கு எதிர்ச் சந்துல திரும்புங்க. நாலாவது ஊடு."

"அதா..... அந்த மரங்களா?"

"இல்ல..... இவத்தால கல்லு ஊடு தெரியுதே அதுக்குத் தெக்கால....."



மாணிக்கத்தின் நோக்கம் புரியாமல் பொன்னுச்சாமி எழுந்தான். "ஏன் சிரமம்? விடுங்க. நானே போயி விட்டுட்டு வர்றேன்."

வந்தவருக்கு ரொம்பவும் சந்தோஷம். "சரீங்க.... தம்பி" என உற்சாகமாகத் தலையாட்டினார்.

பொன்னுச்சாமி, சுந்தரத்திடம் பொதுவாகவும், மற்றவர்களிடம் விசேஷ அர்த்தத்துடன் கண் சிமிட்டியும், "இருங்க, இதோ வந்துட்டேன்" எனச் செருப்பை மாட்டிக் கொண்டான்.

தங்கள் ஆள் ஒருவன் கூடப் போவதில் அவர்கள் எல்லோருக்கும் ரொம்பவும் திருப்தி போலும். ஒருவரையொருவர் புன்முறுவலோடு பார்த்துக் கொள்ள, தான் தனித்துவிடப்பட்ட மாதிரி இருந்தது சுந்தரத்திற்கு.

"நல்ல இடமாத் தெரியுது. எப்படியோ காரியம் நடந்தாச் சரி....." என்றான் அவன்.

"நடக்கட்டும். ஆம்பளைக அப்பிராணி மாதிரியல்ல தெரியுது" — மாணிக்கம் பீடியைப் பற்றவைத்துக்கொண்டே சொன்னான்.

"அப்படித்தான்யா வேணும். அப்பத்தானே மச்சானுக்கு இங்க வசதி...." என்றார் காளியப்ப கவுண்டர்.

எல்லோரும் பெரிதாகச் சிரித்தார்கள்.

இனி தான் அங்கு இருக்க வேண்டிய அவசியமில்லை என தீர்மானித்து "ஒரு டீ.... ரெண்டு வடை" எனக் கணக்குத் தீர்த்தான்.

"என்ன சார்.... புறப்பட்டுட்டீக?"

"ஒரு அவசர வேலை இருக்கு வரேன்."

தனது அறைக்குவந்துவிட்டானே தவிர சுந்தரத்திற்கு இருப்பு கொள்ளவில்லை.

டீக்கடையில் அவனைப் பற்றி இன்னும் என்னென்ன விமரிசனங்களோ? எத்தனை வாய் சிரிக்கிறதோ?

பொன்னுச்சாமி இந்நேரம் 'விஷய'த்தோடு திரும்பியிருக்கக் கூடும். தான் தெரிந்து கொண்டதை நண்பர்களிடம் கொஞ்சம் மிகைப்பட நடித்துக் காட்டி, ஏதாவது புதுக் கதை ஜோடித்து.....

மாப்பிள்ளை வீட்டாருக்குத் தெரிந்தால் என்ன ஆகும்? ஒருவேளை அவளுக்குக் கல்யாணம் ஆகாமலேயே தடுத்து விடுவது தான் இவர்களது எண்ணமா?

"ச்சைய்..... என்ன மனிதர்கள்?"

இரண்டு மாதம் முன்பு மாற்றலாகி இந்த ஊரில் காலெடுத்து வைக்கும்போதே, முதல் அறிமுகம் மல்லிகாவிடம்தான் கிட்டியது அவனுக்கு.

பஸ்ஸை விட்டு இறங்கியதும், வழி கேட்க அவள்தான் எதிர்ப்பட்டாள். தலையில் மோர்ப் பானையுடன்.

"ஏம்மா.... பஞ்சாயத்து ஸ்கூலுக்கு எந்தப் பக்கம் போகணும்?"

உடனே பதில் வரவில்லை.

அவனை ஒரு கணம் கூர்ந்து பார்த்துவிட்டு, "நீங்கதான் புதுசா வர்ற வாத்தியாரா?" எனக் கேட்டாள்.

ஆச்சரியமாக இருந்தது. எவ்வளவு துல்லியமாகக் கேட்கிறாள். தன் முகத்திலேயே எழுதியிருக்கிறதா?

"ஆமா..... யார் சொன்னது?"

"பெரிய வாத்தியார்தான். ரெண்டு மாசமாச் சொல்லிக்கிட்டு இருக்காரு. ஏலே..... புது வாத்தியார் வரப் போறார்.... நல்லாப் படிக்கணும்டான்னு...... நீங்கதானே அது?"

சுந்தரத்திற்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"ஆமா.... ஸ்கூல் பக்கந்தானு?"

"அடுத்த ஸ்டாப்பிங்குல எறங்கி இருந்தால் பக்கம். நிழல்ல சித்த நின்னுட்டுப் போங்க. மோர் சாப்பிடறீங்களா?"

கறுப்புத்தான். ஆனால் அதைக் குறையாகக் கருத முடியாத ஏதோ ஒரு கவர்ச்சி அவளிடம் ஒளி வீசியது.

சிறிது தயங்கி, "குடு....." என வாங்கிக் குடித்தான்.

"பாவம் சார் அவரு..... ஒத்தை ஆளா பள்ளிக்கூடத்தை நடத்திக்கிட்டு வர்றாரு.."

மோர் தரமானதாக இருந்தது.

"இதே ஊர்தானு உனக்கு?"

"பூர்வீகமே இதான்."

"அப்பப் பரவாயில்லே. தினமும் நல்ல மோர் கிடைக்கும்னு சொல்லு."

கபடமில்லாத புன்னகை.

"எவ்வளவு?" என பர்ஸைத் திறந்த போது சுருங்கினாள்.

"இதான் டவுன் புத்திங்கிறது..... விருந்தாளிக கிட்டே யாரும் வியாபாரம் பண்ணுவாகளா?"

அதிகமாகப் பேசிவிட்டோமோ என பயத்துடன் பார்க்க, அவளைச் சமாதானப் படுத்துகிற தோரணையில், "அப்படியா! முதல்லியே தெரிஞ்சிருந்தா இன்னொரு டம்ளர் குடிச்சிருப்பேனே...." என்றான் அவன்.

"வாங்க நானும் அந்தப் பக்கம்தான் போறேன்."

மீண்டும் பழைய புன்னகை. மோர்ப் பானையை தலையில் எடுத்து வைத்துக் கொண்டாள்.

தன்னைப் பற்றி முழு விவரமும் சொல்லிக் கொண்டே நடந்தாள். அம்மா இல்லை. வீட்டில் அப்பாவும், அவளும்தான். ஒரே அக்காள். அவளுக்கும் கல்யாணமாகிவிட்டது. இரண்டு எருமை மாடுதான் எல்லோருக்கும் சோறு போடுகிறது.

ஸ்கூல் தென்பட்டதும் சற்று தொலைவிலேயே விடை பெற்றுக் கொண்டாள்.

"ஏன் அதுவரைக்கும் வர்றது.,......"

"வேணாம் சார்.... ஏற்கெனவே ஊர்ல எனக்கு ஒரு மாதிரியா பேர் இருக்கு."

சுந்தரம் அன்றைக்கு அவளையே நினைத்துக் கொண்டிருந்தான். அவளது பேச்சு, நடை, பாவனை.... எளிய கிராமத்து தேவதை மாதிரி....

மற்ற பெண்களைப் போல தன்னைப் பற்றி மிகையாக எதுவும் சொல்லிக் கொள்ளாதது ஆச்சரியமாக இருந்தது. எவ்வளவு நேர்மையான செயல் இது? ஒருவேளை இது தான் அவளது பலமா?

மனத்தில் அவளைப் பற்றி அழுத்தமாக ஒரு படம் பதிவாகிவிட்டது.

இரண்டாவது நாளே அதற்குச் சோதனை வரும் என எதிர்பார்க்கவில்லை அவன்.

'லஞ்ச்' இடைவேளையின்போது ராமையா சார் விசாரித்தார்.

"என்ன சார் வந்ததும் சிநேகிதம் பிடிச்சுட்ட மாதிரி தெரியுது....."

"சிநேகிதமா....." சுந்தரம் திகைக்க, "மல்லிகாதான் உங்களைக் கூட்டிக்கிட்டு வந்தாளாமே.... அதைச் சொன்னேன்."

"ஆமாம்..... ஸ்கூல் வரைக்கும் அந்தப் பொண்ணுதான் கூட்டி வந்துச்சு. அதுல என்ன தப்பு?"

"நிசமோ பொய்யோ தெரியாது. அந்தப் பொண்ணு கொஞ்சம் தாராளப் போக்கு. சிரிச்சுப் பேசறதை வச்சு இவனுகளேகூட கதை கட்டியிருக்கலாம். உள்ளூர் விவகாரம். நம்ம பெயர் அடிபடாமப் பார்த்துக்கறது தான் நல்லது."

சுந்தரத்திற்கு அதிர்ச்சிதான் அது. ஆனாலும் என்ன செய்துவிட முடியும்? அதற்குப் பிறகு அவளைக் காண நேரும் போது கௌரவமாக ஒதுங்கிவிடுவான். பக்கத்தில் யாரும் இல்லை என்றால் சிநேகிதமாக ஒரு பார்வை. அதிகபட்சமாக, "சௌக்கியமா?" என்று ஒரு வார்த்தை. ஆனாலும் மனசுக்குள் அவளுக்கு அளித்திருந்த ஆசனம், அதே கம்பீரத்துடனும், மரியாதையுடனும் இன்றுவரைக்கும் இருந்தது.

மணி இரண்டு. வெயில் தகித்தது.

சுந்தரம் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டான். சாப்பிடுவதற்கு மாணிக்கத்தின் கடைக்குத்தான் போயாக வேண்டும்.

டீக்கடையில் கூட்டம் இல்லை.

மாணிக்கம் அவனைக் கண்டதும், "ஏன் சார் லேட்?" என வரவேற்றான். இலையைப் போட்டு சாதத்தை நிரப்பினான்.

"ஊர்ல விசேஷங்கள் நடக்குது. கடையில் பேசற கூட்டம் அதிகம். அப்புறமா வரலாம்னு இருந்துட்டேன்...."

சொன்னதைப் புரிந்து கொண்ட மாதிரி மாணிக்கம் சிரித்தான்.

"அந்தப் பொண்ணுக்கு நிச்சயமாயிடுச்சு சார். அடுத்த முகூர்த்தத்துலியே கல்யாணம்

இந்த இதழில் பெரியார் மாவட்டக் கட்டுரைகளுக்கான புகைப்படங்களை எடுத்தவர்:

மணி




# பிலிப்ஸ்

## பிலிப்ஸ் டிசைன் செய்துள்ளதென்றால் அதை ஒவ்வொரு அம்சத்திலும் காணலாம்.



**சீரான அமைப்பு, எழில்மிகு தோற்றம்**

நேர்த்தியும் கம்பீரமும் இணைந்த உறுதிமிக்க பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர், சுகாதாரமானதும் உபயோகத்திற்கு எளிதானதும் ஆகும்.




**உபயோகத்திற்கு மிக எளிதானது**

இரண்டு ஜார்கள்—திரவ பதார்த்தங்களுக்கென ஒரு உறுதிமிக்க ஒளிரும் பிளாஸ்டிக் ஜார்; அரைப்பதற்கென ஒரு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜார். ஒவ்வொன்றும் தனித்தனியாக இணைக்கப்பட்ட பிளேடுகளுடன்

**பல உபயோகங்கள்**

அரைத்தல், கலத்தல், நறுக்குதல், பிழிதல், ப்ளெண்டிங் மற்றும் விப்பிங் போன்ற வேலைகள் செய்ய 3-4 நிமிடங்களே தேவை. இதில் சக்திவாய்ந்த 450 வாட் மோட்டார் உள்ளது. மூன்று அடிப்படை சுழல் வேகங்களுக்கென ரோட்டரி ஸ்விட்ச் மற்றும் உங்களுக்குத் தேவைப்படும் சரியான சுழல் வேகத்தைப் பெற 'இஞ்சிங்' சௌகரியம் கொண்டது.

அம்சத்துக்கு அம்சம் இது உயர்தரமானதாகும். தவிர, நாடெங்கும் பரவலாக விற்பனைக்குப் பின் பிலிப்ஸ் வழங்கும் சர்வீஸ் வசதியின் பின்பலம் கொண்டது.

CLARION/B/P/168/203 TAM

## பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர்

**பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**



# ஜோதிடம்/ஜாதகம்

போட்டி: 51

ஜோதிடம் ஜாதகம் இவற்றில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா. நம்பிக்கை ஏற்படுத்திய அல்லது அவநம்பிக்கை உண்டாக்கிய ஓர் அநுபவத்தைக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பவும். உறையின் மேல் "ஜோதிடம் – ஜாதகம்" எனக் குறிப்பிட வேண்டும். பிரசுரமானால் பரிசு. குலுக்கலில் ஒருவருக்கு வி.ஐ.பி. ஸூட்கேஸ்!

முடிவு தேதி: 5.5.86

இரண்டே ஸூட்கேஸ்கள் பாக்கி! இரண்டு வாய்ப்புக்களையும் தவறவிடாதீர்கள்.

வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

நடக்கப் போகுது....."

"ரொம்ப சந்தோஷம்...."

"பாவம் சார். கஷ்டப்பட்ட பொண்ணு. நல்லா இருக்கணும்."

சுந்தரம் ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தான். தனக்காகச் சொல்கிற வார்த்தைகளா இது?

"பையன் குடுத்து வச்சவன். உக்கார வச்சுச் சோறு போட்டுரும். அவ்வளவு உழைப்பு."

"ஊர்ல ஒரு மாதிரியாய் பேசறாங்களே."

"அதுக்கென்ன வாயா வலிக்குது? பார்த்தவன் ஆரு?"

அவனது குரலில் ஒலித்த கோபத்தைக் கண்டதும், சுந்தரத்திற்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. இன்று காலை வரைக்கும் இவனும் பேசிச் சிரித்தவன்தானே... திடீரென இதென்ன அதிசயம்? என்ன காரணம்?

சாப்பிட ஆரம்பித்தான்.

"மாப்பிள்ளை வீட்டுக்காரங்க ரகசியமா வந்து விசாரிச்சாங்க. ஏனுங்க கடைக்காரரே பொண்ணு எப்படின்னு..... அதிர்ஷ்டக்கார ஆளுய்யா உம் பையன். கண்ணை மூடிக்கிட்டுப் பண்ணலாம்னேன்...... ஏன்?"

மாணிக்கம் பொய் சொல்லவில்லை என முக பாவம் காட்டியது.

சுந்தரம் அவனையே பார்த்துக்கொண்டிருந்தான். மனசுக்குள் ஏதோ நிறைந்த மாதிரி இருந்தது.

சாப்பிட்டு முடித்து, வெளியே பெஞ்சில் வந்து உட்கார்ந்துகொண்டு, செய்தித்தாளைப் புரட்டினான்.

இவர்களை என்னதான் சொல்வது?

மனசுக்குள் நெருடிய சந்தேகத்தை வாய் விட்டே வினவினான் சுந்தரம்.

"நீங்களேதான் மோசம்கறீங்க ... அப்புறம் காரியத்தையும் பார்க்கறீங்க. இதுல எது நிஜம்?"

மாணிக்கம் பதில் சொன்னான்.

"தப்புத்தான். நமக்குள்ள ஏதோ தமாசுக்குப் பேசிக்கிறோம். அதுக்காக வெளி ஆளுகிட்ட விட்டுக் குடுத்துர முடியுமா. அப்புறம் அந்தப் பொண்ணு கதி என்ன ஆகிறது. நம்ம ஊர் மதிப்புத்தான் என்ன ஆகிறது?"

அதை ஆமோதிக்கிற மாதிரி பொன்னுச்சாமி புன்னகை செய்தான்.

கொஞ்ச நேரத்திற்கு யாரும் பேசிக் கொள்ளவில்லை.

பிறகு பொன்னுச்சாமியே ஆரம்பித்தான்.

"அண்ணாச்சி விஷயம் தெரியுமா. இன்னிக்கு நம்ம கருப்பணன் மகன் வடிவேலும் அந்த காமாட்சி குட்டியும் செஞ்ச காரியம்?"

"என்னடா....."

"விசேஷத்துக்கு வந்தவங்க பாத்துப் பாத்து சிரிக்கக்கிறதும், ஜாடை மாடையாப் பேசிக்கிறதும்....."

"அட எழவே..... நம்ம பொன்னுத்தா மகதானே அவ?"

சுந்தரம் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தான்

ஸ்ரீராம் ஜெயம்

கடலூர்

அன்புள்ள லலிதாவுக்கு,

நலம், நலமா? ஒரு விஷயம் உனக்குத் தெரியுமா? 'ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் கம்பெனி' இந்த தமிழ் புத்தாண்டு அன்று, ரூ.5000 டெபாசிட் செய்தா 15% வட்டியோடு, குடும்பத்துக்கு உபயோகமான நல்ல புத்தகங்களையும் அன்பளிப்பா* கொடுக்கிறாம். பேப்பரிலே பார்த்தேன்.

இந்த அன்பளிப்பு ஏப்ரல் 30ம் தேதி வரை தானாம். 'ஸ்ரீராம் கம்பெனி' நல்ல கைராசியான கம்பெனி! நான் ஏற்கனவே டெபாசிட் போட்டிருக்கிறேன். மறுபடியும் போடப் போகிறேன். நீயும் புது வருஷம் அன்னிக்கு, ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் கம்பெனி,
54, வடக்கு உஸ்மான் சாலை, தி.நகர்,
சென்னை-17 க்குப் போய் டெபாசிட் செய்.

பிறக்கப் போறது 'அக்ஷய' வருஷமாச்சே! அமோகமாப் பெருகட்டும்!

உன் அன்புள்ள,
கீதா

*
குறிப்பு:
அன்பளிப்புகள் என்னென்ன தெரியுமா?
1. Hamlyn Giant Book of Knowledge.
2. Hamlyn Junior Encyclopedia.
3. பூஜையிலே வைக்க 10 கிராம் வெள்ளிப் பதக்கம்.
(இவைகளில் ஏதாவது ஒன்று.)

சுவாமிநாதன் மிகுந்த திருப்தியுடன் வாயிற் பக்கம் வந்து ஒருமுறை நோட்டம் விட்டார். ஐஸ்வர்யா போட்டிருந்த வண்ணக் கோலம், கண்ணைப் பறிப்பது போல, வாயிற்புறம் அழகிட்டிருந்தது. வரப் போகிற நல்ல காரியத்திற்கு இதைவிட அழகான விளம்பரம் தேவையா?

''பெரியப்பா!'' குரல் கேட்டுத் திரும்பினார். அஸ்வத் மகிழ்ச்சி பொங்க அவர் அருகில் வந்தான். ''சமையல்கார அம்மாளுக்கு மஞ்சுவே எல்லாச் சாமான்களும் கொடுத்துக் கொள்றேன்னு சொல்லிட்டா. நீங்க பெரியம்மாகிட்டே கொஞ்சம் சொல்லி வையுங்கோ. ரொம்ப அலையறா'' என்றான் உரிமையான கோபத்துடன்.

''நான் சொல்லிக்கறேன். அவளுக்குச் சுபாவமாகவே சும்மா இருக்கப் பிடிக்கிறதில்லே. அதுதான் தவறு. போகட்டும். ஐஸ்வர்யா போட்டிருக்கிற கோலத்தைப் பாத்தியா?'' என்று பிரமிப்புடன் கூறினார்.

''அழகா போட்டிருக்கா. அதே சமயம் அவள் வாழ்க்கையை அலங்கோலம் செய்து கொள்ளாமல் சீர் செய்துட்டேனே. ரொம்ப தாங்க்ஸ்'' என்றான் அஸ்வத் நன்றி பொங்க.

''நான் சொன்னப்போகூட ஐஸ்வர்யா கேக்கலே. உங்க பெரியம்மா சொன்னப்புறம் தானே அவளுக்குப் புத்தியில உறைச்சது'' சுவாமிநாதன் மனக்கண்முன், அன்றிரவு சம்பவம் நிழலாடியது.

அனைவரும் உண்டு மகிழ்ந்திருந்த வேளையில், ஐஸ்வர்யா வந்து நின்றதும் திகைத்துப் போனதும் உண்மை. ''பெரியப்பா! இனிமேல் நான் எங்கேயும் போகப் போறதில்லே. இங்கேதான், பெரியம்மாவுக்கு எல்லா ஒத்தாசையும் செய்து கொண்டு



இருந்துடப் போறேன்'' படபடத்துவிட்டு, கிரண் தொடர உள்பக்கம் சென்றாள். சுவாமிநாதன் கன்னத்தில் கைவைத்தபடி அருகிருந்த நாற்காலியில் அமர்ந்துவிட்டார்.

''ஐஸ்வர்யா! இங்க வாம்மா'' என்று விமலா மெல்லிய குரலில் கூப்பிட்டாள்.

''மஞ்சுளா! இதுதான் அஸ்வத்தோட சகோதரி ஐஸ்வர்யா.''

மஞ்சுளா அழகான பல் வரிசை தெரிய மோகனமாகப் புன்னகை புரிந்தாள். குழந்தை கிரணை வாரி எடுத்துக் கொண்டு கொஞ்சினாள். சிறிது நேரத்திற்குள் மஞ்சுளாவும், ஐஸ்வர்யாவும் நெருக்கமாக உரையாடத் துவங்கிவிட்டனர்.

''ஐஸ்வர்யாவும், குழந்தையும் சாப்பிட்டிருக்கமாட்டார்கள். இருக்கிறதைப் போடு...'' என்று விமலா உத்தரவு இட்டாள்.

கோபாவேசத்தில் வீட்டை விட்டுப் புறப்பட்டிருந்த ஐஸ்வர்யாவுக்குப் பசி உயிரே போய்விட்ட உணர்ச்சி. பசி மீறிப் போய் உண்ட களைப்பில் கிரண் தூங்கிப் போய்விட்டான்.

விமலா ஐஸ்வர்யாவைப் படுக்கையருகே அமர்த்திக் கொண்டு, பல்வேறு விஷயங்களை அலசிக் கொண்டிருந்தாள்.

''ஐஸ்வர்யா! நான் சொல்றதை நீ ஒழுங்காகக் கேட்பாயா?'' பேச்சின் நடுவே விமலா கூறியதும் அவள் வியப்புடன், ''சொல்லுங்கோ பெரியம்மா'' என்றாள்.

''பேசாமல் குழந்தையோட அமெரிக்கா போய்விடு.''

''பெரியம்மா!'' வெடுக்கென தலையைச் சிலிர்த்துக் கொண்டாள் ஐஸ்வர்யா.

''எனக்கும் சில சுய கௌரவங்கள் இருக்கு தெரியுமோ. என்னைக் கவனிக்காத புருஷனை நானும் மதிக்க மாட்டேன். ஐ டோண்ட் வாண்ட் ஹிம்!''

விமலா சிரித்தபடி, ''நீ எதைக் கௌரவம்னு நினைக்கறே'' என்று கேட்டாள்.

''என்னோட சுதந்திரத்தை நான் படிச்சவள், பெரிய இடத்துப் பெண்!''

''இதையெல்லாம் நீ அவனைக் காதலிக்கிறதுக்கு முன்னே யோசிச்சிருக்கணும். உன்னையும், குழந்தையையும் காப்பாத்தணும்னு அங்கே ஓடிப் போய், கால நேரம் இல்லாமல் உழைக்கிறானே, அப்போ அவன் ஒண்ணும் தன் சுதந்திரம் பறி போய்விட்டதாக அலுத்துக்கலையே?''

''பெரியம்மா! நீங்க என்னையே குற்றவாளியாக்கறேள். எல்லாரும் உங்களை மாதிரி வாயை மூடிக் கொண்டு செக்கு மாடாக உழைக்க மாட்டார்கள் புரிஞ்சுக்கொள்ளுங்கோ. அப்படியெல்லாம் நீங்கள் பிறருக்காக உழைத்தீர்கள். இப்பொழுது என்ன பலன் கிடைச்சது'' சீற்றத்துடன் கூறியபடி எழுந்தாள் ஐஸ்வர்யா.

''நீ நன்னா யோசிக்கணும் ஐஸ்வர்யா. உன் புருஷன் நல்ல பையன். இல்லாவிட்டால் பெரியப்பாவே உன் காதல் கல்யாணத்திற்கு உடன்பட்டிருக்க மாட்டார். இன்னொன்னு குழந்தை கிரண். நாளைக்கு அவன் பெரியவனாகி அப்பா எங்கேன்னு கேட்டால் என்ன பதில் சொல்வே?''

''ஹூம்! அவன் ஏன் கேட்கப் போறான்? இப்பவே அந்த நினைவை மறக்கடிச்சுட மாட்டேன்!'' சவால் விட்டாள் ஐஸ்வர்யா.

அது சமயம் உள்ளே வந்த சுவாமிநாதன், ''என்ன விமலா. உன் பங்கு உபதேசமும் செவிடன் காதுல ஊதின சங்கா?'' என்றார்.

''இல்லே! நாளைக் கார்த்தாலக்குள்ளே ஐஸ்வர்யா மனசை மாத்திக்கணும். இல்லாட்டா அவ நாம வளர்த்த குழந்தை இல்லே. முதல்லே அவளை எங்கேயாவது அனுப்பிடுங்கோ.''

''பெரியம்மா'' அதிர்ச்சியுடன் நின்றாள் ஐஸ்வர்யா.

''நான் அடிமையாக வாழ்ந்தேன்னு பரிகாசம் பண்ணினே. பொறுமையா ஒரு பெண் குடும்பத்தை அனுசரித்துக் கொண்டு போகிறது அடிமைத்தனம் இல்லே. முதல்ல அதைப் புரிந்து கொள். உன்னைப் போல அப்ப நான், உங்க பெரியப்பாவை எதிர்த்துப் பேசி விட்டெறிந்திருந்தால், உங்கப்பா இவ்வளவு பெரிய பதவிக்கு வரமுடியாது. நீங்க எல்லாம் இப்படிப் பேசக்கூடச் சந்தர்ப்பம் வந்திருக்காது. நான் ஏன் பொறுமையாக சகல கஷ்டங்களையும் சகிச்சுக் கொண்டேன் தெரியுமா? முன்கோபமோ, ஆத்திரமோ, என் புருஷர் நல்ல குணம் படைச்சவர், மத்தவாளுக்கு உபகாரம் செய்யறவர்னு அவர்மேல் ஒரு மரியாதை இருந்தது. இந்தக் காலத்துப் பெண்களைப் போல் சம உரிமைன்னு எனக்குக் கூச்சல் போடத் தெரியாமல் இருக்கலாம். அதுக்காக நான் வருத்தப்படலே. இப்ப அதே புருஷன்தான் என்னைக் கண்ணுக்குள்ளே வச்சுக் காப்பாத்திண்டிருக்கார்னு பெருமையோட நான் செத்துப் போவேன். உன்னால் அது முடியுமா?'' என்று விமலா சோர்வுடன் கட்டிலில் சாய்ந்து கொண்டாள்.

''விமலா! நீ ரொம்ப அலையறே. பேசறே. இதெல்லாம் உடம்புக்கே ஆகாது. ஐஸ்வர்யா! ப்ளீஸ். நீ எங்ககூட உட்காரு'' அதட்டிவிட்டு ஐஸ்வர்யாவின் கையைப் பற்றி அழைத்துச் சென்றார் சுவாமிநாதன்.

**அ**ன்றிரவு முழுதும், குழந்தை கிரண், ''டாடி! டாடி!'' என்று புலம்பியபடி புரண்டு கொண்டிருந்தான். ரப்பர் நுரை மெத்தை மீது தூங்க வேண்டிய குழந்தை. பாயின் மீது தூங்க முடியாமல் சிரமப்படுகிறதோ? சுவாமிநாதன் தவித்துப் போனார். அருகே படுத்திருந்த ஐஸ்வர்யாவும் உறக்கம் வராமல் எழுந்து உட்கார்ந்திருப்பதைப் பாராதது போல் படுத்திருந்தார் சுவாமிநாதன். நடந்த சம்பவங்களை அசை போட்டுப் பார்க்கட்டும்



# அருள் வாக்கு

**லோ**க வாழ்க்கை ஒரு பாலைவனம். இந்திரியங்களுக்கு ஸுகம் மாதிரி இதிலே தோன்றுகிறதெல்லாம் கானல் நீர்தான்.

பாலைவன விஷயமாக என் ரிஸர்ச் ஒன்றைச் சொல்கிறேன். இப்போது ஸஹாரா பாலைவனமாக இருப்பது ஒரு காலத்தில் ஸமுத்ரமாக இருந்த இடம் என்று ஜியாலஜிக்காரர்கள் சொல்கிறார்கள். உங்களுக்கு ராமாயணக் கதை தெரிந்திருக்கலாம். ஸகரன் என்ற ராஜாவின் பிள்ளைகள் தான் பூமியை வெட்டிக் கொண்டே போய் ஸமுத்ரத்தை உண்டாக்கினார்கள் என்று அதில் சொல்லியிருக்கிறது. ஸகர புத்ரர்கள் வெட்டியதாலேயே ஸமுத்ரத்துக்கு 'ஸாகரம்' என்றபெயர் ஏற்பட்டிருக்கிறது. ஸாகரம் என்பதுதான் மருவி 'ஸஹாரா' என்றாயிருக்கிறதென்று நினைக்கிறேன்.

இந்தியாவில் ராஜஸ்தானம் இப்படிப் பட்ட ஒரு பாலைவனமாகத்தான் இருக்கிறது. பாலைவனத்துக்கு ஸம்ஸ்கிருதத்தில் 'மருவாடிகா' என்று பெயர். இதனால்தான் ராஜஸ்தான்காரர்களை நாம் 'மார்வாடி' என்று சொல்கிறோம்.

ஒரு காலத்தில் உயிரையும் செழிப்பையும் ஊட்டுவதான ஜலம் ஸமுத்திரமாக இருந்த இடமே இப்போது பாலைவனமாக இருக்கிறது என்கிற மாதிரி இந்த லோக வாழ்வான பாலைவனமும் உயிருக்கு ஸாரமான பரமாத்மாவிடமிருந்து வந்ததுதான்! ஆனால் அதிலே இப்போது ஆத்மாவை வளர்க்கிற ஸாரம் இல்லை. காமம், க்ரோதம் முதலான கானல்நீரோட்டம்தான் நம்மை இழுக்கடித்து, அலையாக அலைய வைத்து நாசம் பண்ணுகிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

என்ற எண்ணம் அவருக்கு. மஞ்சுளா விமலாவுக்கு உதவியாக அவள் அருகேயே படுத்துக் கொண்டு விட்டிருந்தாள்.

**ம**றுநாள் காலை எழுந்த ஐஸ்வர்யாவின் முகம் தெளிவடைந்திருந்தது. நேராக, நல்ல பிள்ளை போல் குளியலறைக்குள் சென்று குளியலை முடித்து, சுவாமி மேடையில் விளக்கேற்றினாள்.

"என்னம்மா இது? என்ன விசேஷம்?'' என்றார் சுவாமிநாதன் வியப்போடு.

''பெரியம்மா சொன்னதைக் கேட்டேன். ராத்திரி முழுதும் தூங்கலே. இப்பொழுது அவருக்கு ஒரு 'கால் புக்' செஞ்சு பேசிடலாம்னு இருக்கேன் பெரியப்பா. ராத்திரியெல்லாம் குழந்தை அவன் அப்பாவை நினைச்சு ஏங்கிப் போயிட்டான்'' என்றாள் சிறிது நாணத்துடன்.

சுவாமிநாதன் பூரிப்பில் மிதந்தார். ஐஸ்வர்யா அங்கிருந்து எத்தனை மும்முரமாக வந்தாள்? இப்போது இவ்வளவு விரைவில் மனம் மாறிவிடுவாள் என்றே அவர் எதிர்பார்க்கவில்லையே?

''ரொம்ப சந்தோஷம். உன் கல்யாண விஷயத்தில் தலையிட்டு, ஆகி வரலையேன்னு கவலைப்பட்டேன். இப்பொழுது நீ சௌக்கியமா இருக்கணும். அதற்குமுன்னே, அஸ்வத்—மஞ்சுளா கல்யாணத்தையும் முடிச்சிட்டுப் புறப்படும்மா'' என்றார் சுவாமிநாதன்.

துன்பமும் சரி. இன்பமும் சரி. ஒருத்தனுடைய வாழ்வில் எதி[illegible]

மேலும் வந்து கொண்டே இருக்கும். சுவாமிநாதனுக்கு அடுத்தடுத்து சந்தோஷமான செய்திகள் வந்த வண்ணம் இருந்தன.

கேசவனை, அஸ்வத் வேலை தேடிக் கொடுத்து மனிதனாக்கி அனுப்பி வைத்தான். புறப்படுமுன் நாத்தடுமாற சுவாமிநாதன் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டான்.

சுவாமிநாதன் கண்களில் ஆனந்தக் கண்ணீர். இளமையின் வேகத்தை நல்ல முறையில் செயல்படுத்திவிட்டோம் என்ற சந்தோஷத்துடன் ஆசிர்வதித்து அனுப்பினார்.

அஸ்வத், ஐஸ்வர்யா இருவருமே சுவாமிநாதனைவிட்டு நீங்கமாட்டார்கள் என்று தெரிந்தபின் கணேசனும், அருணாவும், நேராகப் புறப்பட்டு வந்துவிட்டனர்.

உள்ளே வந்ததும் அருணா எதுவும் பேசவில்லை. கணேசன் மட்டும் முந்திக் கொண்டார். ''அண்ணா! நடந்ததைமறந்துவிடுவோம். அஸ்வத் கல்யாணத்துக்கு நான் சம்மதிக்கிறேன்.''

''அப்பா'' என்றபடி அஸ்வத் ஓடி வந்து தன் தகப்பனாரைத் தழுவிக் கொண்டான்.

''மஞ்சுளா! இவர்கள்தான் உன் மாமனாரும், மாமியாரும். நமஸ்காரம் பண்ணு. இனிமேல் உங்கப்பா அம்மாவை வரவழைத்துக் கல்யாணம் நிச்சயம் பண்ணலாம்'' என்று குழந்தையைப் போல் சுவாமிநாதன் சிரித்தார்.

**அ**ன்று அஸ்வத்தின் திருமண நிச்சய

# நீர்தானம் செய்வதின் பலன்

நீர்த்தானம் எல்லாத் தானங்களிலும் சிறந்தது. ஆகையால் வாவி கூபம் தடாகம் முதலியவற்றை ஒருவர் ஏற்படுத்த வேண்டும். கிணறு வெட்ட வேண்டும் என்று கருதியவனுக்கு அப்போதே அவனிடமுள்ள பாவத்தில் பாதி தொலையும். பசுக்கள், விப்பிரர், நல்லோர், சாதாரண மனிதர்கள் முதலிய எல்லோருக்கும் பயன்படும்படி ஒரு நீர்த்துறையைத் தோண்டுவித்தவன் தன் வமிசத்தார்கள் எல்லோரையும் புனிதர்களாக்க வல்லவனாவான். தடாகம் நிர்மாணஞ் செய்தவன் மூவுலகங்களிலும் மற்றெவ்விடத்திலும் பூஜிக்கத் தக்கவனாகவாவது சூரிய லோகத்திலாவது வீற்றிருப்பான். இவ்வுலகில் அவனுக்கும் புகழ் உண்டாகும். திருத்தலங்களில் விசாலமான ஒரு தடாகத்தையாவது, கிணற்றையாவது பலருக்கும் பயன்படும்படி ஏற்படுத்துபவனுக்கு அறம், பொருள், இன்பம் என்பன கைகூடுவதுடன் உத்தமமான சம்பத்தும் கைகூடும். இத்தகைய ஜலாசயத்தைத் தேவர்களும், மனிதரும், கந்தர்வரும், பிதுரரும், உரகரும், ராட்சஸரும், தாவரங்களும் எப்போதும் விரும்புகிறார்கள்.

(சிவ மஹா புராணம்)

மேலும் பலன் அடைய கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நேக்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

இனிப்பு: அதிரசம், ஸ்வீட் சோமாஸ், பொரிவிளங்காய் உருண்டை, குங்குமப்பூ ஜாங்கிரி, குங்குமப்பூ லட்டு, குங்குமப்பூ பாதாம் ஹல்வா குங்குமப்பூ கோதுமை அல்வா, தேங்காய் போளி, மங்களூர் போளி, வெல்லச் சீடை.

காரம்: கைமுறுக்கு, தேன்குழல், தட்டை, சீடை, சீப்புச்சீடை, ரயில் கட்டிடம், கார்ன்பிளேக்ஸ் மிக்ஸர், பாம்பே அவல் மிக்ஸர், பாம்பே உருளைக்கிழங்கு சிப்ஸ், வெஜிடபிள் சமோசா.

திருமண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், பருப்புத் தேங்காய் வகைகள்.

## கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு,
சென்னை- 600 020 போன்: 412557

தாம்பூலம் நடக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். மஞ்சுளாவைப் பார்த்ததுமே அருணாவின் மனம் மாறிப் போயிற்று.

''துடைத்து வைத்த குத்து விளக்காட்டம் இருக்கிறாளே. அதுதான் அஸ்வத், அப்படி ஒரேயடியாகப் பிடிவாதம் செய்திருக்கான்'' என்று மனத்திற்குள் சமாதானம் செய்து கொண்டாள். ஓடோடிச் சென்று பிறருக்கு உபசரிப்பதிலும், சமையல் அறை, இதர பொறுப்புக்கள் என்றுமிக செம்மையாகவும், நேர்த்தியாகவும் மஞ்சுளா வேலை செய்ததைப் பார்த்தாள் அருணா.

''ஐஸ்வர்யாவாலேகூட இப்படிச் செய்ய முடியாது'' மனத்திற்குள் எண்ணிப் பூரித்துப் போனாள். ''தொலைஞ்சு போகட்டும்! அவன் இஷ்டப்படியே விட்டுடுவோம்'' என்று தனது கர்வத்தை மேலுக்குக் காட்டிக் கொண்டாள்.

ஐஸ்வர்யா கணவனிடம் திரும்பிப் போக ஒப்புக் கொண்டுவிட்டாள் என்றதும், பெருத்த நிம்மதி அருணாவுக்கு. தன் வாழ்நாளிலேயே, முதன் முதலாக ஓரகத்தியிடம் சென்று, ''மன்னி! சீக்கிரம் உடம்பைக் குணமாக்கிக் கொண்டு நடமாடுங்கோ. அஸ்வத் கல்யாணத்தை நாம் எல்லாருமா சேர்ந்து ஜமாய்ச்சுடலாம்'' என்றாள் உபசாரமாக.

சுவாமிநாதன் வேகமாகச் செயல்பட்டார். அன்று மாலை, வரப் போகும் சம்பந்திகளை உபசரித்து விருந்து நடக்கப் போகிறது. வேடிக்கை என்னவென்றால் அவர்களது பெண்ணே, அந்த விருந்துக்கு மேற்பார்வை!

சுவாமிநாதனிடம் விமலா காலையிலேயே ஒரு விஷயம் குறிப்பிட்டிருந்தாள். ''டாக்டர் மோகனையும் கூப்பிடுங்கோ. இங்கே வந்த வேளை அந்தப் பையனுக்கும் நல்ல இடத்தில் கல்யாணம் ஆகட்டும். கபாலி அறுபத்து மூவர் உற்சவம் ஆரம்பிச்சிருக்கு இல்லியா?''

''நீ போய்ப் பார்க்கப் போறியா?'' என்று கேலி செய்தார் அவர்.

''அதுக்கில்லே. மோகனை அழைத்துக் கொண்டு வரச்சே, அப்படியேதானே வருவேள்?''

''எதுக்குச் சுத்தி வளைக்கறே?''

''தேரடி மஞ்சளும், குங்குமமும் ரொம்ப விசேஷம்.''

''உனக்கு இந்த முரட்டுப் புருஷன் மேல, இன்னமும் பைத்தியக்கார பக்தி போகலைன்னு தெரியறது. கட்டாயம் மஞ்சள், குங்குமம் வாங்கிண்டு வரேன். போறுமா?'' அதுநாள்வரை, அவரிடம் எதுவும் வேண்டும் என்று கேட்காத மனைவி, கேட்டுவிட்ட பெருமையில் புறப்பட்டார் அவர்.

வற்புறுத்தி மோகனை அழைத்துக் கொண்டு கபாலி கோவில் வியாபாரத்தை முடித்துக் கொண்டு வீடு திரும்பிய சமயம் மாலை மங்கிவிட்டது.

முன்புறவாயிலில் யாவரும் நின்றுகொண்டிருந்தனர். ''பாத்தியா மோகன். எல்லாரும் தயார். நாமதான் லேட்'' என்று தமாஷாகக் கூறிவிட்டு முன்பக்கம் காலை வைத்தார். சுருக்கென ஏதோ ஒன்று அவருக்கு உதயமாயிற்று. ஏன் இவர்கள் யாரும் என்னவோ போல.....? அஸ்வத் எங்கே?

ஐஸ்வர்யா பயமறைந்த நிலையில் ஓடி வந்தாள். ''பெரியப்பா சீக்கிரம் வாங்கோ. நர்ஸிங் ஹோமுக்கு போன் பண்ண அஸ்வத் போயிருக்கான்.''

''என்ன ஆச்சு?'' தன்னை மீறிய பதற்றத்துடன் உள்ளே ஓடினார் சுவாமிநாதன்.

''பெரியம்மா மயங்கி விழுந்துவிட்டாள். ரெண்டு தடவை வாந்தி எடுத்தாளாம்'' ஐஸ்வர்யா அழுகையுடன் படுக்கையருகே கூறியபடி நின்றாள்.

''டாக்டர் மோகன்'' தொண்டையில் வார்த்தைகள் சிக்கித் தடுமாறின. டாக்டர் மோகன், அவசரமாக விமலாவைப் பரிசோதித்தான். அவன் முகத்தில் வியர்வை பொங்கியது. கலவரம் தோன்றியது. ''ஓ காட்'' என்றபடி அவர் பக்கம் திரும்பினவன், ''ஐ ஆம் ஸாரி ஸார். அவங்க.... அவங்க....'' அவன் முடிக்குமுன், சுவாமிநாதன் மனைவியை உற்றுப் பார்த்தார்.

நோயின் வேதனையிலிருந்து விடுபட்ட முகத்தில் புன்சிரிப்பு. தூங்குவது போன்ற பாவனையில் விமலா படுத்திருந்தாள்.

''விமலா! விமலா!'' அவளைத் தொட்டு எழுப்ப முயன்றவரைப் போல் நின்றார். ''ஊஹும். நீ எழுந்திருக்க மாட்டே. என்னை இத்தனை வருஷமா எனக்கு முன்னே எழுந்து களைச்சிருப்பியே. இந்த முரட்டுப் பயலோட இனிமேல் வாழ்ந்து சாத்யப்படாதுன்னு போயட்டியா....'' கொஞ்சம் கொஞ்சமாக ஸ்ருதி ஏற, ''இதோ பாரு, நீ கேட்ட மஞ்சள், குங்குமம் கடைசி கடைசியாக வாங்கிக் கொண்டு வந்தேன். வச்சுக்கோ. இந்தா வச்சுக்கோ. விமலா.....'' குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார்.

அஸ்வத் அதிர்ந்து போனான். ''பெரியப்பா! என் கல்யாணத்தை நடத்தி வைக்கறேன்னு பெரியம்மா சொன்னாளே. இப்ப எங்கே'' என்று கதற ஆரம்பித்தான்.

''அஸ்வத்! அழாதேப்பா.... எல்லாரும் அழாதீங்கோ. அதோ என்னோட விமலாவுக்காகச் சொர்க்கத்தோட கதவுகள் திறந்து இருக்கின்றன. அவள் பரிசுத்த ஆத்மா அப்பா. அதனால் நிச்சயம் இந்தக் கல்யாணத்தை நான் நடத்தி வைக்கறேன். அப்பத்தான் அவள் ஆத்மா சாந்தியடையும். இன்னைக்கு அவள் ஞாபகமாக ஏழைகளுக்கு விருந்து படைப்போம். கணேசா, இன்னொரு நல்ல நாளிலே இவா ரெண்டு பேர் கல்யாணத்தை முடிச்சு வைக்கலாம்'' பித்துப்பிடித்தவர் போல் உரக்கச் சிரித்தார் சுவாமிநாதன்.

''பெரியப்பா! நீங்க எல்லாம் ஆன பிறகு எங்ககூட வந்து இருங்கோ பெரியப்பா!'' ஐஸ்வர்யா குமுறினாள்.

''இல்லேம்மா. என் விமலா வாழ்ந்த இடம். நான் இங்கேயே இருப்பேன். என்னாலே மத்தவங்களுக்கு எத்தனை உபயோகமாக இருக்க முடியுமோ இருப்பேன்'' என்றபடி விமலாவின் நெஞ்சின் மீது மஞ்சள் குங்குமம் பொட்டலத்தை வைத்தார். ஏனோ, அதன் பிறகு அவர் மௌனமாகிப் போனார்.

(முற்றும்)

# ஈடு இணை இல்லாத இளமை வேகம்...



# விஜய் சூபர் மார்க் II

## வேறு எந்த 150cc ஸ்கூட்டரும் தரமுடியாத
## ● சிக்கனம் ● சக்தி ● பாதுகாப்பு ● உழைப்பு
## அனைத்தும் அளிக்கும் அற்புதமான ஸ்கூட்டர்.



**குறைந்த பெட்ரோல், நீண்ட பயணம் :**

ஒரே ஒரு லிட்டர் பெட்ரோல் போதும் — 56 கிலோ மீட்டர் போகலாம்! ஜப்பானிய வெஞ்சுரி கார்புரேட்டர், இத்தாலிய வடிவமைப்பில் உருவான 9.6 BHP சக்தி கொண்ட சிறப்பாயும் எஞ்சின், அமெரிக்க K & N ஏர்ஃபில்டர் — இவை மூன்றும் இணைந்த அமைப்பினால் ஏராளமான பெட்ரோல் மிச்சம்!



**பாங்கான அமைப்பு, பாதுகாப்பான ஓட்டம் :**

நடுப் பகுதியில் எஞ்சின் அமைந்த அழகான, வலுவான அமைப்பு—கெளியாத, வளையாத சீரான ஓட்டம் — மின்னல் வேகத்திலும் சறுக்காத பிரேக் பிடிப்பு—இவை யாவும் தருவது சொகுசான, பாதுகாப்பான பயணம்.

**உழைப்பின் உறுதி :**

1000 தாக்கட்டுப்பாடு சோதனைகளுக்குப் பின் அளிக்கப்படுவது 15 மாதம்/10,000 கி.மீ. உழைப்புக்கான வாரண்டி.



**விஜய் சூபர் ஸ்கூட்டர் உலகில் சூபர் ஸ்டார்!**



**ஸ்கூட்டர்ஸ் இந்தியா லிமிடெட்**
352, அண்ணா சாலை,
சென்னை-600 035.
போன் : 450654

விற்பனையாளர்கள் : ● சென்னை : மெட்ராஸ் ஸ்கூட்டர்ஸ், போன் : 451774. ● சரவணன் ஆட்டோ ஒர்க்ஸ். போன் : 470274 ● மதுரை : பாபு ஆட்டோ எய்ட்ஸ். போன் : 33047 ● திரைடர்ஸ். போன் : 32393 ● சேலம் : விஜய் ஏஜென்சீஸ். போன் : 7123 ● கோவை : ● S.J. பாலகிருஷ்ணன் & கோ. போன் : 31759 ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (SI) லிமிடெட். போன்: 23363/64 ● திருச்சி : விக்னேஸ்வரா & கோ. போன் : 28928 ● திருநெல்வேலி : இந்தியா ஸ்கூட்டர். போன் : 4700 ● ஈரோடு : ஆனந்தா ஆட்டோமொபைல்ஸ். போன் : 79204. ● பாண்டிச்சேரி : பைலட் ஏஜன்சீஸ். போன் : 6460.

ADWAVE SIL 3090A

# ஒரு வாழ்க்கையும் வகுப்பறைப் பாடமும்...

"சீதா அம்மாவெல்லாம் மத்தியானம் 'மேக்கப்' போட ஆரம்பிக்கிறப்பவே வந்திடுவாம்மா! நீ எப்படியும் அஞ்சு மணிக்குள்ளேயாவது வந்துடு! அப்பத்தான் முதல் வரிசையிலே உட்கார்ந்து எங்க டிராமாவையெல்லாம் நன்றாய்ப் பார்க்கலாம்!'' குழந்தை காலையிலேயே பத்துத் தரம் படித்துப் படித்துச் சொல்லியிருக்கிறாள்.

இன்று, அவள் படிக்கிற பள்ளியில் ஆண்டு விழா! இயந்திர கதி வாழ்விலிருந்து வலுக்கட்டாயமாக என்னை விடுவித்துக் கொண்டு, தொடர்ச்சியாக மூன்று மணி நேரம் உடலுக்கும், மனதுக்கும் கட்டாய ஓய்வு கொடுத்துக் கொள்ள எனக்கு வாய்த்த ஒரு சந்தர்ப்பமாகவே இதைக் கருதிக் கொள்கிறேன்.

பள்ளி, விழாக் கோலம் பூண்டிருக்க, வாயில் முகப்பில் பன்னீர் தெளித்து வரவேற்கிறார்கள். சில்லென்ற நறுநீர் தெறிக்கையில் உடல் குளிர்வதுபோல், அங்கே திரிகிற மழலைப் பட்டாளங்களின் அணி வகுப்பில் மனமும் லேசாகி மலர்ந்து போகிறது. பின் வரிசை நாற்காலிகளைப் புறந் தள்ளிக் கொண்டு முன்னேறுகையில், உள்ளே இருக்கும் மேக்கப் அறையிலிருந்து சீதாவின் அம்மா வெளிப்படுகிறாள்.

''வாங்க! இப்பத்தான் வரீங்களா?' எங்கம்மா எப்ப வருவாங்க ஆண்ட்டி'ன்னு கேட்டுக் கேட்டு உங்க பொண்ணு மாய்ஞ்சு போச்சு! சீக்கிரம் போங்க!''

மிகப் பெரிதான வகுப்பறை ஒன்று, அணியறையாக மாறியிருக்க, ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் இயற்கையும் செயற்கையுமான பூச்சரங்கள்..... அவற்றிடையே, மொட்டு விரிந்த மலர்களாய்..... இறகு முளைத்த தேவதைகளாய்க் கிரீடம் தரித்த அரசர்களாய்க் கவசம் அணிந்த காவலர்களாய்க் குழலூதும் கண்ணனாய்.... அவனைச் சுற்றிச் சூழ்ந்த கோபியராய்..... இன்னும், பல வகைகளில் அவதாரமெடுத்து உருமாற்றம் பெற்றிருக்கிற குழந்தைகள்! என் மகள் பூண்டிருந்த கோலம் அவற்றில் இன்னதென்று பிடிபடாமல் நான் தடுமாறுகையில் சரிகைச் சேலையால் உடல் முழுவதும் போர்த்திய மென் கரம் ஒன்று, என் தலைப்பைப் பிடித்திழுக்கிறது..... ஓ! என் மகள்.... இன்றைய மாலையின் ராணியோ? அவளது ஒப்பனை சரிவரப் பொருந்தியிருக்கிறதா என்று தாய்மைக்கரிசனத்தோடு ஒருமுறை பரிசீலனை செய்கிறேன்.

''இன்னும் நெத்திச் சுட்டி, ஒட்டியாணம், கிரீடம் எதுவுமே வச்சுக்கலையே நீ...?''

''அதெல்லாம் இப்ப வச்சுவிட மாட்டாங்கம்மா! எங்க டிராமாவுக்கு முன்னாலே நடக்கப் போற ஒரங்க நாடகம் முடிஞ்சவுடனே, அதிலே நடிச்ச ராணியுடையதைக் கழட்டி, அதோ அந்த அக்கா போட்டு விடுவாங்க!''

அப்பொழுதுதான் பார்க்கிறேன். இருபாலரும் இணைந்து பயிலுகிற அந்தப் பள்ளியில், ஆண் குழந்தைகளுக்கு ஒரு சுருட்டை முடி இளைஞனும், பெண் குழந்தைகளுக்கு மிக அழகான ஓர் இளம் நங்கையுமாக ஒப்பனை செய்து கொண்டிருக்கிறார்கள். பின்னல் கோலாட்டமிடும் குழந்தைகளுக்குக் குஞ்சலம் முடித்து அனுப்பிவிட்டு, அடுத்த குழுவினருக்கு முகப் பூச்சைத் தொடங்குகிற அந்தப் பெண்ணின் முகம்....எனக்குமிகவும் பரிச்சயமானதாக, நெருக்கமானதாக நினைவில் இடறுகிறது. ஆண்டுக்கு ஆயிரக்கணக்கான முகங்கள் அறிமுகமாகிற இந்த ஆசிரியத் தொழிலில் இது ஒரு சிக்கல்! எந்த முகமும்..... எங்கேயோ கண்ட முகமாகவே தோன்றும்! ஆனால், பெயரும் வகுப்பும் மட்டும் நினைவுக்கு வராமல் சண்டித்தனம் செய்யும். ஆனாலும்..... இவள்.... இந்தப் பெண்...., இவளின் நடை, உடை, பாவனைகள், எனக்கு நன்றாகவே அறிமுகமானவை. இவளது பெயர்கூடக் கொஞ்சம் வித்தியாசமாய்......??

அவளாக என்னை நினைவுபடுத்திக் கொள்ளக் கூடுமோ என்ற எண்ணத்தில், கொஞ்சம் நெருங்கிப் போகிறேன். அவளோ, கவனம் சற்றும் கலையாதவளாகத் தன் பணியில் லயித்துப் போயிருக்கிறாள். முக ஒப்பனைக்கான அடிப் பூச்சைச் சமமாகத் தடவி முடித்தபின், தன் முகத்தில் வழிகிற வியர்வையைத் துடைக்கச் சற்றே நிமிர்கிற போது, அவள் கண்ணில் படும் தொலைவில், நான்! விநாடிக்கும் குறைவான ஒரு காலத் துணுக்கில் அதிர்ச்சி மின்னலடித்த அவள்

கண்கள், உடனடியாகத் தாழ்கின்றன. உணர்ச்சி பாவங்களை வெளிப்படுத்தாமல் இருந்த அவள் முகம்..... இன்னமும் இறுகிக் கல்லாய்ப் போகிறது. என் அனுமானந்தான் ஒருவேளை பிசகிப் போனதோ? என்னுடைய அறிமுக வட்டத்திலிருந்து விலகியிருக்கும் ஒரு செய்மைப் புள்ளியோ இவள்....?

அடுத்த கட்ட முயற்சியாக என் மகளை அவளருகே இழுத்துக் கொண்டு வந்து வலியப் பேச்சுக் கொடுத்துப் பார்க்கிறேன்.

''எக்ஸ்க்யூஸ் மீ! இவளுக்கு ராணி வேஷத்துக்குக் கிரீடமெல்லாம் எப்ப வைக்கப் போறீங்க?''

தெரிந்த பதிவின் துணை கொண்டு, தெரியாத இன்னொரு விடையைத் தேட நான் செய்த முயற்சி, வியர்த்தமாய்ப் போகிறது. முதலில் என் பெண் சொன்ன அதே காரணத்தை அவளும் வறண்ட குரலில் ஒப்பித்துவிட்டு, மீண்டும் தன் வேலையில் மூழ்கிப் போகிறாள். இனியும் அவளைத் தொடர்ந்து தொந்தரவு செய்தல்..... நாகரிகத்தின் அத்து மீறலாகிவிடுமென்பதால் குழந்தைகளுக்குக் கொண்டு சென்றிருந்த டிபனைக் கொடுத்து விட்டு பார்வையாளர் கூட்டத்திலே வந்து உட்கார்ந்து கொள்கிறேன். மாலையில் எடுத்த உறுதிகள்..... முடிவுகள் எல்லாம் நீர்த்துப் போக, மனது ஏதோ காரணத்தால் அமைதி இழந்து தவிக்கிறது.

'அந்த 'யாரோ'வான அவள், யாராக வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டுமே! எதையும் எளிதாக எடுத்துக்கொள்ளத் தெரியாத நெஞ்சம், ஊசலாட்ட கொண்டு முட்டி மோதுகிறது. நினைவுக் குளத்திலிருந்து ஞாபக முத்துக் கிட்டுவதற்குள் திரை தூக்கி நிகழ்ச்சிகள் தொடங்குகின்றன.

முதல்வரின் அறிமுக வரவேற்பு, ஆண்டறிக்கை முதலிய சம்பிரதாயங்கள் முடிந்ததும், விழாவின் சிறப்பு விருந்தினர் பேச ஆரம்பிக்கிறார். பள்ளி வாழ்வின் இனிய வசந்தங்கள், குதூகலங்கள், சிநேகங்கள் என்று அவர் அடுக்கிக் கொண்டு போகிற போது, சட்டென்று அந்த நினைவுப்பூ

எம்.ஏ.சுசீலா



மனத்தில் பொறி தட்டி நிமிர்த்தத் துணுக்குற்றுச் சிலிர்க்கிறேன். சிநேகா....! ஆமாம் சந்தேகமில்லே! அந்தச் சிநேகாதான் இவள்! நினைவுப் பொறிக்குள் எலியாய்ச் சிக்கிக் கொண்ட எண்ணங்களைக் கலைக்கும் வல்லமை, இளசுகள் வழங்கும் இனிமையான நிகழ்ச்சிகளுக்குக்கூட இல்லாமல் போகிறது.

சிநேகா.....! வாழ்வையே ஒரு துள்ளலாய்.... பேச்சையே ஒரு சங்கீதமாய்.... நடையையே ஒரு நாட்டியமாய் ஏற்றிருந்த அந்தக் கல்லூரிக்காலத்துச் சிநேகா.....என் மனத்தை முழுமையாக வியாபித்துக் கொண்டு, கண்ணுக்குள் முட்டி நிற்கையில், புறக் காட்சிகள்.... நீர்த் திரை போர்த்த படலங்களாகி மங்குகின்றன.

''மேடம், எனக்கொரு பிரச்னை! அதை உங்ககிட்டேதான் மனம் விட்டுச் சொல்ல முடியும்னு தோணுது'' என்றபடி சிநேகா என்னை நாடி வந்தபோது, நான் கல்லூரியில் ஆசிரியப் பொறுப்பேற்றுச் சில ஆண்டுகளே ஆகியிருந்தன.

''ஆனா, அதை உங்ககிட்டே எப்படிச் சொல்றது.... எங்கேயிருந்து ஆரம்பிக்கிறது, எதுவும் எனக்குத் தெரியலே! ஆனாலும் உங்களைத் தவிர் வேற யார்கிட்டேயும் இதைப் பத்திப் பேசப் பிடிக்கலே.''

தன் பூரண நம்பிக்கைக்குரியவளாக அந்த மாணவி என்னை ஏற்றிருந்ததில் மனம் மகிழ்ந்தாலும், சுற்றி வளைத்து அவள் போடுகிற பீடிகை, என்னைத் திகைக்கவும் வைக்கிறது.

''மேடம்! எங்க குடும்பப் பின்னணியைப் பத்தி உங்களுக்கு ஏற்கெனவே ஓரளவுக்குத் தெரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன்.''

அந்த ஊரின் மிகப் பெரிய பணக்காரக் குடும்பங்களில் ஒன்று, சிநேகாவுடையது. செல்வத்தின் செழுமை, அவள் உடை வண்ணத்திலே மட்டுமல்லாமல் உடல் வண்ணத்திலேயும் தெரிகிற அதிசயத்தை, நான் பலநாட்கள் வியப்போடுபார்த்திருக்கிறேன்.

''நான் பிறந்து விழுந்த நாளிலேயே, நான் இன்னாரைத்தான் கல்யாணம் பண்ணிக்கணும்கிறதும், அப்பத்தான் வீட்டுப் பணம் வெளியே போகாதுங்கிறதும் கூட, உறுதி செய்யப்பட்டுத் தீர்மானிக்கப்பட்ட விஷயங்கள் மேடம்!''

''சரிம்மா, இப்போ அதுக்கென்ன?''

''இல்லே மேடம்! இப்பச் சில நாளா, என் மனசே எனக்குப் புரிபடலே! எங்க வீட்டுக்குப் பக்கத்திலே இருக்கிற கார் ஷெட்டை, ஒரு நாடகக் குழுவுக்கு ரிகர்சல் நடத்த வாடகைக்கு விட்டிருக்காங்க! அந்தக் குழுவிலே நடிக்கிற ஆள் ஒருத்தர், என்னை ரொம்பவும் விரும்பறார்!''

''அது உனக்கு எப்படி?''

''கோட்டை மாதிரி இருக்கிற எங்க வீட்டுக்குள்ளே அந்நிய ஆட்கள் பிரவேசிக்கக்கூட முடியாதுதான்! மத்த பெண்கள் மாதிரி, நான் நடந்தோ, பஸ்ஸிலேயோ காலேஜுக்குப் போறதில்லே! ஆனாலும் இத்தனையையும் மீறிக்கிட்டு, என் கார் அந்த ஷெட்டைத் தாண்டறப்ப என்னைப் பார்க்கணுங்கிறதிலே அவர் காட்டற வேகத் துடிப்பு, தடைகளையெல்லாம் எப்படியோ உடைச்சுக்கிட்டு அவர் அனுப்பற துண்டுக் கடிதங்கள்..... இதெல்லாம் அவர் மனசைத் தெளிவாய்க் காட்டுது மேடம்!''

''அவர் மனசு இருக்கட்டும் சிநேகா! இதிலே உன் விருப்பம் எப்படி? நீ அவரைப் பத்தி என்ன நினைக்கிறே? நீயும் அவரை நேசிக்கிறியா? அவரைக்கல்யாணம்செய்துக்கணும்னு ஆசைப்படறியா?''

''எனக்குக் குழப்பமே அதிலேதான் மேடம்! எனக்காக, என் காருக்காக அவர் ஆசையாய்க் காத்திருந்து என்னைப் பார்க்கத் துடிக்கிறதும், என் பிரியத்துக்காக ஏங்கித் தவிக்கிறதும்..... எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு! என் உள் மனசுக்கு அதெல்லாம் வேண்டிக்கூட இருக்கு! ஆனா, என் மனசிலேயும் அவர் மேலே அதே மாதிரியான பிரியம் இருக்குதா! அதே மாதிரி எதிரொலிகள் என் நெஞ்சிலேயும் எழும்புதாங்கிறதுதான் எனக்கே புரியாத புதிரா இருக்கு! நாங்க ரெண்டு பேருமே, இதைப் பத்தி மனசு விட்டுப் பேசிக்கிட்டதுகூட இல்லே!''

இது என்ன தடமே பிடிபடாத சிக்கல் என்று நான் நினைத்து முடிப்பதற்குள்.... என் பிரச்னையை முடித்து வைப்பது போலக் கல்லூரி முடிவதற்கான மணி ஒலிக்கிறது.

''சரிம்மா சிநேகா, நான் இதைப் பத்திக் கொஞ்சம் தனியா உட்கார்ந்து யோசிக்கணும். நீயும் அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் வந்திடாதே! அமைதியா உனக்குள்ளேயே இதை அனலைஸ் பண்ணிப் பார்த்து இதுக்கு என்ன சொல்லூஷன்னு யோசி. நாம ரெண்டு பேரும் சீக்கிரமே இதைப் பத்தி இன்னொரு நாள் பேசுவோம்!''

எப்படியோ சிநேகாவுக்கு ஒரு தீர்வு சொல்லுகிற பொறுப்பிலிருந்தும் வழி காட்டுகிற கடமையிலிருந்தும் அப்போதைக்குத் தப்பித்துக் கொண்டுவிட்ட உணர்வுடன் பஸ்ஸைப் பிடிக்க விரைகிறேன்.

நாங்கள் அதைப் பற்றிப் பேசுகிற சந்தர்ப்பம், திரும்பவும் வாய்க்காமலே தட்டிப் போகிறது. வேலை நிறுத்தக் கதவடைப்புக்கள், தொடர்ந்துதேர்வுகள் எல்லாம் முடிந்து, கல்லூரி திறக்கப்பட்டு ஒரு வாரம் ஆகியும் சிநேகா, வகுப்புக்கு வராமல் போகவே,

---

''அடப்பாவமே! கையெழுத்து சரியில்லே என்பதற்காகவா உன்னை ஜெயிலுக்கு அனுப்பிவிட்டார்கள். அப்படி அது என்ன கையெழுத்து?''

''எங்க முதலாளியின் கையெழுத்து.''

— ப்ரியா பாலு.



காலத்தால் அழியாத
காவியம் படைக்கும் சில நேரங்கள்.



hmt
கடியாரங்கள்
ஹேண்ட்வௌண்ட் ● ஆட்டோமேடிக்
குவார்ட்ஸ்

நாட்டிற்கு நல்ல நேரம் காட்டுவோர்.

அங்கிருந்த ஒரு மாணவியை நான் வினவுகிறேன். சிநேகாவைப் பற்றி நான் பேச்செடுத்த உடனேயே வகுப்பில் எழும் சலசலப்பு, மாணவியர்க்கு இடையிலான சங்கேதப் பார்வைகள்.... இவையெல்லாம் என் கலவரத்தை மிகுதிப்படுத்துகின்றன.

''உங்களுக்கு நியூஸ் தெரியாதா மேடம். அவ டிராமா கம்பெனி ஆளு ஒருத்தரோட வீட்டை விட்டு ஓடிப் போயிட்டா!''

மிகவும் சிரமப்பட்டு என்னை நிலைப்படுத்திக் கொள்ள முயன்றவளாக, அன்றைய வகுப்பை முடித்துவிட்டு வெளியேறுகிறேன். உள்ளார்ந்த தவிப்போடு அவன், அந்தச் செய்தியை என்னுடன் பகிர்ந்து கொண்ட போது அவனுக்கு ஆக்கபூர்வமான ஆலோசனை எதனையும் சொல்ல முடியாமல் நழுவிக் கொண்ட என் இயலாமை..... இப்போது, என்னையே குற்றவாளிக் கூண்டில் ஏற்றுகிறது. இச் செய்தி, என் செவிக்கு ஒரு விபத்தாகவே அஞ்சலாகிறது.

அடி மன ஆழத்தில் வடுவாய்ப் புதைந்து போன அந்த நெருடலைக் காலத்தின் சுழற்சி, படிப்படியாக அகற்றி வரும் இந்த வேளையில், இப்போது மீண்டும் சிநேகா! என் மகள், மேடையேறி, ஜான்சி ராணியாகக் கர்ச்சிக்கிற வீர முழக்கத்தைக் கேட்டு அரங்கமே கைதட்டி ஆர்ப்பரிக்கையில் என் மனம் மட்டும் சிநேகாவின் வாழ்க்கை மர்மம் புரியாமல் ஓலமிடுகிறது.

பெண்ணுக்கு வேடம் கலைக்கிற பாவனையில், மறுபடியும் ஒப்பனை அறைக்குள் போகிறேன். இந்தமுறை, என் வருகைக்காகவே காத்திருந்தவள் போலச் சிநேகா, தானாக என் அருகில் நெருங்கி வருகிறாள்.

''என்னை நினைவிருக்கா மேடம்?''

''சிநேகா....'' என்றபடி அவள் கரங்களைப் பற்றிக் கொள்கிறேன்.

''பரவாயில்லை. உங்களுக்கு என் பெயராவது நினைவிருக்கே?'' என்றபடி நிமிர்கிறவளின் கண்கள், நீர்க் குளம் கட்டியிருக்கின்றன.

''என்னம்மா இப்படிப் பேசறே? நான் உன்னை முதலிலேயே அடையாளம் கண்டுக்கிட்டேன். நீதான்.....!''

''இப்பவும் ரொம்பத் தயக்கத்துக்கப்புறம் தான் உங்களோடு பேசிடலாம்னு துணிஞ்சு வந்தேன் மேடம். உங்ககூட நின்னு பேசற அந்தஸ்தைக்கூட இப்போ நான் இழந்துட்டேன் மேடம்!''

''அப்படியெல்லாம் சொல்லாதே சிநேகா! அப்படி என்ன நடந்து போச்சு இப்ப? நீயா தேடிக்கிட்ட வாழ்க்கையிலே, சந்தோஷமா இருந்தால் சரிதான்! அவர், உன்னை நல்லபடியாத்தானே வச்சுக்கறார்?'' என்றபடி பையன்களின் ஒப்பனையைக் கலைப்பதில் ஈடுபட்டிருந்த அந்த வாலிபனைப் பார்க்கிறேன்.

அவளோ அவசரமாய் மறுக்கிறாள்.

''இவர் அவரில்லே மேடம்! என்னைக் கூட்டிக்கிட்டு ஓடிப் போன ஆளு, ஆரம்ப மோகம் தீர்ந்தப்புறம் என்னைப் புறங்கையாலே ஒதுக்கித் தள்ளிட்டாரு. அப்புறம் எங்க வீட்டு நிழலிலே வேலைக்காரியா ஒண்டிக்கக்கூட என் பெற்றோர் எனக்கு இடம் தரலே. அதே நாடகக் குழுவிலே மேக்கப் மேனா இருந்த இவர்தான் என் நிலைமையைப் பார்த்துப் பரிதாபப்பட்டு, இப்ப ஆதரவு தந்துக்கிட்டிருக்காரு. இவருக்கும் கூட நான், அஞ்சாறு பேரிலே ஒருத்திதான்! ஆனாலும் ஏதோ ஒட்டு மொத்தமாய்ச் சாக்கடைக்குள்ளே முழுகிடாமக் கொஞ்சம் ஓரமா நடமாடிக்கிட்டிருக்கேன்.''

அதைச் சொல்லி முடிப்பதற்குள், நான் பார்த்து வியந்திருந்த அவளின் தந்த நிற முகம், குங்குமமாய்க் குழம்பிச் சிவந்து போகிறது. மாணவர்களின் ஒப்பனையைக் கலைக்கும் அவசரத்தோடு அவன் அவளைக் குரலெடுத்து அழைக்கிறான்.

''இனிமேல் வருங்காலத்திலேயும் என்னை மாதிரி பிரச்னையோட ஸ்டூடண்ட்ஸ், உங்க கிட்டே வருவாங்க மேடம்! அப்ப..... வேறே எதையுமே உங்களாலே சொல்லமுடியாட்டாலும், என் கதையையாவது அவங்ககிட்டே சொல்லலாம்! அது, உங்களுக்கு நல்லாவே உதவும் மேடம்.''

போகிற போக்கில் அவள் சொல்லிவிட்டுப் போகிற வார்த்தைகள், என் ஏட்டுச் சுரைக்காய் மீது விழுந்த இடிகளாகி, என்னை எள்ளி நகையாடுகின்றன. வகுப்பறைகளில் பாடம் புகட்டலை விட, வாழ்வைப் புகட்டல் முக்கியமோ? அதிலேதான் நாம் தவறி விடுகிறோமோ? அல்லது வாழ்க்கை என்பது, எல்லோருக்குமே புரியாத ஒரு பாடந்தானோ?

வீட்டுக்குத் திரும்புகிற வழி நெடுகிலும், ''நான் எப்படிம்மா நடிச்சேன்?'' என்று என் மகள் அரித்தெடுக்க, நானோ அதை அடியோடு மறந்துவிட்டவளாய்க் கனத்துப் போன மனத்துடன், மௌனமாய் நடந்து வருகிறேன்.

---



ஈரோட்டிலிருந்து மேட்டூர் செல்லும் பாதை மீதுள்ளது அம்மாப்பேட்டை. இங்கு மூன்றாண்டுகளுக்கு முன்பு தன்னிறைவுத் திட்டத்தில் கீழ் எம்.ஜி. ஆரால் திறந்து வைக்கப்பட்ட மகப்பேறு மருத்துவமனை இன்னமும் திறக்கப்படாமலேயே இருக்கிறது. அது மட்டுமல்ல; இந்த மகப்பேறு மருத்துவமனைக் கட்டடம் இப்போது சோளமூட்டைகளைப் பத்திரப்படுத்தி வைக்கும் கிடங்காகப் பயன்பட்டுக் கொண்டிருக்கிறது!

இனி மருத்துவமனைகளுக்குப் பதிலாகத் தனியாக அரசு கோதுமைக் கிடங்குகளையே கட்டட்டும். அப்போதுதான் கிராமங்களின் மருத்துவ வசதி கிடைக்கும்!

## போர்டை பார்த்து ஏமாறாதீர்கள்



# நெருப்பாக நீ

இன்பாவின் இந்த பயம்கூட அவளது கவர்ச்சியை அதிகரிக்கச் செய்வதாகத்தான் நினைக்கிறான் நந்து.

இது பற்றிக் காரசாரமாய், இன்பாவின் தந்தை ஜனார்த்தனத்திடம் விவாதிக்கவும் செய்திருக்கிறான்.

''உண்மையில் எந்தப் பொண்ணும், எதைப் பார்த்தும் பயப்படறது கிடையாது சார். இதெல்லாம் சும்மா.....

''கரப்பு, பல்லி, ஒட்டடை, சினிமாவுல வர்ற வில்லனோட சிரிப்பு, இருட்டு, பட்டாசுச் சத்தம், சின்னச் சின்ன ரத்தக் காயம்.... இதுக்காகவெல்லாம் பயந்து, தன் புருஷன் இல்லையின்னா தன்னோட பாய்ஃப்ரெண்டோட முதுகுக்குப் பின்னாடி ஒளிஞ்சுக்கிறது பொண்ணுங்களோட சாகசத்துல ஒரு ரகம்.

''இப்படிப் பயப்படற எத்தனையோ பொண்ணுங்க, பின்னாலே கொலை செய்யக் கூடத் தயங்கறதில்லே.''

ஜனார்த்தனம் மௌனமாய்ப் புன்னகை புரிவார். அவன் போனதும் மகளிடம் கேட்பார்.

''ஆமா. அந்தப் பிள்ளையாண்டானுக்குப் பெண்கள் மேல் ஏன் அத்தனை வெறுப்பு?''

''பெண்கள் மேல் இல்லை. பெண் மேல். அவன் என்னை 'லவ்' பண்றான். அதே மாதிரி நானும் அவனைக் காதலிக்கணும்னு ஆசைப்படறான். இன்னும் என் வாயிலேயிருந்து, 'நானும் உன்னைக் காதலிக்கிறேன்' கிற வார்த்தை வரல்லே! அந்தக் கோபம்தான்.''

''இவ்வளவுதானே, நீ அவனைக் காதலிக்கிறியா இல்லையாங்கறதைச் சட்டுப்புட்டுனு சொல்லிட்டுப் போயேன். அநாவசியமா எதுக்காக அலைக்கழிக்கறே?''

''எப்படி? காதல்னு ஒண்ணு இருக்கா, இல்லையாங்கிறதே குழப்பமான விஷயமாக இருக்கு. அப்படியே இருந்தாலும், இவங்க நினைக்கிற மாதிரி பீச்சுலே மணிக்கணக்கா உட்கார்ந்து, இருக்கிற வேலையெல்லாத்தையும் விட்டுட்டு, ஒருத்தருக்காக இன்னொருத்தர் மணிக்கணக்காகக் காத்திருந்து, பொய் சொல்லி, பக்கம் பக்கமாக லெட்டர் எழுதி, அழுது, சிரிச்சு, இதுக்குப் பேரெல்லாம்தான் காதல்னு நீங்களும் நினைக்கிறீங்களா?''

''பின்னே?''

''காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கறோம்கிற வார்த்தையே தப்பு. கல்யாணம் பண்ணிட்டு காதலிக்கிறோம்னு வேணுமானால் சொல்லலாம். கல்யாணத்துக்கு முன்னாடி ஒருத்தர் மேல் ஏற்படற பிரியம், அவர் இல்லே, அவ, ஆப்போஸிட் செக்ஸைச் சேர்ந்தவர்ங்கிறதால மட்டுமே..... நீங்களே சொல்லுங்களேன். அம்மாவை நீங்க கல்யாணம் பண்ணிட்டு, காதலிச்சீங்களா, இல்லே காதலிச்சுக் கல்யாணம் பண்ணிட்டீங்களா?''

ஜனார்த்தனத்தை எந்த வார்த்தைகளால் மடக்கிப் போட முடியும் என்பதை அவள் தெரிந்து வைத்திருக்கிறாள்.

**சென்ற இதழில்.........**

ஓவியக் கல்லூரியில் படிக்கும் இன்பாவும் நந்தகுமாரும் காதலர்கள். நந்தகுமாரின் சொந்த ஊருக்கு அவனுடன் சென்று வர இன்பா தன் தகப்பனாரின் அனுமதி பெற்றிருக்கிறாள். ஆனாலும் நந்தகுமாரும் நேரில் வந்து மரியாதைக்கு அவரிடம் பேசிச் சம்மதம் பெற வேண்டும் என்று விரும்புகிறாள்.

ஒருநாள் கல்லூரியில் பேச்சினிடையே நந்தகுமாரைத் தனக்குப் பென்சில் சீவித் தரச் சொல்லிக் கேட்கிறாள் இன்பா. பென்சில் சீவப் பயப்படும் அவளைக் கேலி செய்கிறான் நந்தகுமார். "பிளேடால விரலை வெட்டிக்கிட்டா என்னவோ கழுத்து அறுபட்ட தலையைப் பார்க்கிற மாதிரி தோணும் எனக்கு!" என்று உண்மையான ஒரு பீதியுடன் பேசும் அவளைப் புரிந்து கொள்ளாமல் நந்தகுமார் சிரிக்கிறான்.



தன் மனைவியைப் பற்றி நினைக்க ஆரம்பித்துவிட்டால் சோறு தண்ணீர் தேவையில்லை அவருக்கு.

யார் வந்தாலும் ஜனார்த்தனம் தன் மனைவியைப் பற்றிப் பேசாமல் இருக்க மாட்டார்.

ஒரு தாட்சண்யத்துக்குக் கட்டுப்பட்டு, நந்தகுமாரே அவரது மனைவி புராணத்தை எத்தனை தடவை கேட்டிருக்கிறான்?

இன்பா — அவள் சுமந்து பெற்ற குழந்தையில்லை. அநாதை ஆசிரமத்தில் மூக்கொழுக, சுவரோடு சுவராய், பல்லி மாதிரி ஈஷிக்கொண்டிருந்த குழந்தை.

இருபது வருஷங்களுக்கு முன்பே இலங்கையில் சொத்து சுகங்களையெல்லாம் போட்டுவிட்டு, சிங்களவர்களின் கொடுமை தாளாமல், சொற்பப் பணமும், கையில் ஒன்றரை வயசுப் பெண் குழந்தையுடனும் கள்ளத் தோணி ஏறி, இந்தியாவை நோக்கிப் புறப்பட்டவர்கள்தான் ஜனார்த்தனமும், லட்சுமியும்.

அர்த்த ராத்திரியில் ரகசியத் துடுப்பொலி காதில் விழுந்து தொலைக்க, எவனோ ஒரு சிங்கள ராணுவன் இலக்கில்லாமல் சுட்ட குண்டிற்குப் பலியானது, அவர்களது அருமைக் குழந்தைதான்.

மண்டபம் வந்து சேரும் வரையில் குழந்தையை விடாமல் அணைத்து வந்தவளுக்கு, பின்னால் இதுவே மன வியாதியாகவும் மாற... அநாதை ஆசிரமத்திலிருந்து ஒரு பெண் குழந்தையை எடுத்து வளர்த்தால், லட்சுமியின் பாசத்துக்கு ஒரு வடிகால் கிடைக்கும் என டாக்டர் சொல்ல, ஜனார்த்தனம் அவளை அழைத்துக் கொண்டு ஒவ்வொரு விடுதியாய் ஏறியிறங்க....

கலங்கின கண்களும், மெலிந்த தேகமும், முகத்தில் எப்பொழுதுமே படர்ந்திருந்த கலக்கமுமாக, இன்பா கிடைத்தாள்.

"'அப்பக்கூட நான் சொன்னேன். 'சுவீகாரம் எடுக்கத்தான் எடுக்கிறோம். ஒரு பிள்ளைக் குழந்தையா..... இல்லே, பார்க்கிறதுக்குக் 'கழுக்மொழுக்'குனு துறுதுறுப்பா இருக்கிற பொண் குழந்தையா எடேன். இதைப் பார்த்தா முனி அடிச்சாப்பல இருக்குதுன்னு...."

இப்படிச் சொல்லிவிட்டு, அவர் மகளைக் குறும்பாய்ப் பார்த்துச் சிரிப்பார்.

"உங்க அம்மாதான் ஒத்தைக் கால்லே நின்னு.....மத்த குழந்தைங்களைவிட, இதுக்குத்தான் பாசமும் பரிவும் தேவையின்னு சொன்னா. ஒரு தட்டு கீழே விழுந்தாக்கூடப் பயந்து அலர்ற குழந்தைக்கு ஆசையா, 'இன்பவல்லி'ன்னு பேர் வச்சதுகூட அவதான்."

லட்சுமி இன்பாவிடம் கொட்டிய பாசத்தைச் சொல்ல ஆரம்பித்தால், அழுதே விடுவார் அவர்.

''இந்தக் குழந்தையோட எத்தனை பாடு பட்டிருக்கிறாள் தெரியுமா அவள்? நாலு வயசு வரைக்கும் ராத்திரியில் எழுந்து உட்கார்ந்து அழ ஆரம்பிச்சா ஓய மாட்டா. அடிக்கடி காய்ச்சல். விளக்கு அணைஞ்சு போனா அதுக்கு ஓர் அலறல்.... ஒரு தடவை பக்கத்து விட்டுப் பையனும் இவளுமாக விளையாடிட்டிருக்கிறப்ப அவன் கீழே விழுந்து முட்டியைப் பேர்த்துக்கிட்டான். விழுந்தவன் ரத்தத்தைத் துடைச்சிட்டு எழுந்துட்டான். இவள் மயக்கம் போட்டுக் கட்டையோட கட்டையா ஆயிட்டா. மயக்கம் தெளிய நாலு நாளாச்சு. சில குழந்தைங்களுக்கு இரத்தத்தைப் பார்த்தால் அலர்ஜியாம். பொண் குழந்தைங்கன்னா, பெரியவளானதுக்கு அப்புறம் பயம் தெளிஞ்சிடும்னு டாக்டர் சொன்னார். இதுக்காகவே இன்பா பெரிய மனுஷியாறதை ரொம்ப ஆவலோட எதிர் பார்த்துட்டிருந்தா அவ அம்மா. ஆனா அவளோட பதினொராவது வயதிலேயே, 'பொக்'குனு போயிட்டாளே.''

நந்து, இன்பாவிடம் ரகசியமாய்க் கேட்டிருக்கிறான்.

''நீயா அத்தனை பயந்தாங்கொள்ளியா இருந்தே?''

இன்பாவுக்குமே அது ஆச்சரியமான விஷயம்தான்.

பதினொரு வயசில், அம்மா இறந்தது இன்னும் பசுமையாக நினைவிலிருக்கிறது.

ஒரு பகல் நேரம்.

ஜனார்த்தனம் வியாபாரம் விஷயமாய் பம்பாய் போயிருந்தார்.

ஞாயிற்றுக் கிழமை. வழக்கம் போல் எண்ணெய்க் குளியல். அம்மாவின் கையால் கடச் கட மீனு ரசமும், தேங்காய்த் துவையலும். அவி[illegible]யமாய் ஒரு பிடி பிடித்தாயிற்று.

அம்மாவிற்கு வெற்றிலை பாக்கு என்றால் வெகு இஷ்டம். கைநிறையக் கொழுந்து வெற்றிலையை எடுத்துக் கொண்டு, பாக்கையும் சுண்ணாம்புப் பாட்டிலையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஊஞ்சலில் உட்கார்ந்து விடுவாள்.

அன்றும் அப்படித்தான். அவள் சாவகாசமாய் வெற்றிலை போட்டபடி உட்கார, இன்பா, டிராயிங் நோட்டில், அம்மாவைப் படம் வரைவதாகச் சொல்லி, பிரஷ்ஷைத் தண்ணீரில் தோய்த்து, வாட்டர் கலரில் குழப்பி, பூசிக் கொண்டிருக்க.....

''யம்மாடி, ஒரு முழுங்கு தண்ணி கொண்டாயேன்!''

லட்சுமி நெஞ்சை ஒரு கையால் தடவிக் கொண்டே கூறினாள்.

''ஒரு படம் போடறதுக்குள்ளே எத்தனை வாட்டி அசைவே?''

இன்பா ஏதோ குடியே முழுகி விட்டாற் போல அலற.

''தண்ணிடி. அப்புறம் அசையாமல் போஸ் கொடுக்கறேன்.''

இன்பா, ஃப்ரிஜ்ஜைத் திறந்து தண்ணீர் கொண்டு வருவதற்குள், லட்சுமி, ஊஞ்சலிலேயே பள்ளி கொண்டுவிட்டாள்.

''அம்மா.... தண்ணி....''

''......''

''தண்ணி கேட்டுட்டுத்தூங்கிட்டா எப்படி?''



இன்பா, லட்சுமியைத் தொட்டு மெள்ள அசைத்துப் பார்த்தாள்.

ஊம்ஹூம். அவள் எழுந்திருக்கவே இல்லே!

இருந்தாலும் அவள் ஊஞ்சலில் சாய்ந்திருந்த நேர்த்தி, இன்பாவிற்குள் அந்தக் காட்சியை வரைய வேண்டும் என்கிற ஆசையைக் கிளப்பிவிட....

அவள் சுவாரஸ்யமாய் வரையத் தொடங்குகிறாள். நடுநடுவே சிரிப்புப் பொங்கி வர, இரு கைகளாலும் வாயைப் பொத்தி, சிரிப்பை அடக்கப் படாதபாடு படுகிறாள்.

. இருக்கட்டும், இருக்கட்டும் அம்மா எழுந்திருக்கட்டும். படத்தைக் காமிக்கலாம். எப்ப கேட்டாலும், எனக்குத் தூக்கமே வர்றதில்லேன்னு சொல்லுவாளே, 'இது என்னது' ன்னு கேட்கணும்.

ஓவியத்தை வரைந்து முடிக்கும் வரையில் அம்மா எழுந்திருக்காதது, சிறுமிக்கு ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது.

மாலே மூன்று மணி சுமாருக்கு காலிங் பெல் அலற, எழுந்தவள், இத்தனே சத்தத்துக்கும் அம்மா எழுந்திருக்காததை ஒருவித பயம் கலந்த வியப்புடன் திரும்பிப் பார்த்து விட்டு வாசற் கதவைத் திறக்க.....

வேலேக்காரி....

''என்னும்மா, இம்பா. நல்ல பொண்ணு ஆட்டோட குந்திக்கினு கீறே, வெள்ளாடப் போவலே?''

''படம் வரைஞ்சிட்டு இருந்தேன்.

''அம்மா தூங்கறா. எழுப்பினு எழுந்திருக்க மாட்டேங்கறா.''

வேலேக்காரி, 'பொட்'டென நின்று திரும்பிப் பார்த்தாள்....

''என்னடி சொல்றே?''

''நீ வேணு வந்து எழுப்பு.''

அவள் இன்பாவையும், லட்சுமியையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, மெள்ள லட்சுமியின் காதருகில் கூப்பிட்டாள்.

அவ்வளவுதான். முகத்தில் பயம் திட்டாய் அப்ப, அவள், எஜமானியின் உடம்பைத் தொட்டுப் பார்த்தாள்.

அது, எப்போதோ குளிர்ந்துவிட்டிருந்தது.

''அம்மா பூட்டாங்கடி இம்பா, ஐயய்யோ, இப்ப என்ன செய்வேன்.''

வேலேக்காரியின் வெண்கலத் தொண்டைக்கு இருந்த சக்தி, அன்றுதான் தெரிந்தது.

அவள் கத்தக் கத்த அக்கம்பக்கத்திலிருந்து ஒவ்வொருவராய் வரத் தொடங்கினர்கள். சற்று நேரத்தில், அந்தக் கூடத்தில் எள் போட இடமில்லே.

யாரோ ஒருவர், காலடியில் கிடந்த டிராயிங் நோட்டை மிதித்துக் கொண்டு, கும்பலில் தலேயை நுழைக்க,

இன்பா 'விருட்'டென நோட்டுப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டாள்.

அம்மா....

தலே முடிச்சு அவிழ, முகம் சற்றே விபரீதமான கோணத்தில் சாய்ந்திருக்க, மூடிய இமையும், சப்பை மூக்கும், செக்கச் சிவந்த உதடுமாய்..... அம்மா....

எதற்கும் பயந்து சாகும் இன்பா, ஓடிப் போய் ஊஞ்சலிலிருந்த தாயை இறுகக் கட்டிக் கொண்டாள்.

(தொடரும்)

சென்னை மயிலை விவேகானந்தர் கல்லூரி முன்னாள் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியர்

## வே. ஸ்ரீ. வேங்கட ராகவாச்சார்யர்

எழுதிய விரிவான தமிழுரையுடன் கூடிய பயனுள்ள நூல்கள்:

## ரிக்வேதி பூர்வ ப்ரயோகம்

தேவநாகரியில் மூலமும், தமிழில் விளக்கவுரையும் கொண்டது. உபநயனம், விவாஹம் முதலிய சுபச் சடங்குகளை இந்நூலைப் படித்துச் செவ்வனே செய்ய இயலும். ரிக்வேதிகளுக்கு மிக மிக முக்கியமானது. யஜுஸ், ஸாம வேதிகளுக்கும் உதவியானது. 270 பக்கங்கள். விலை ரூ. 65. 18.5.1986 வரை சலுகை விலை ரூ 50; தபால்செலவு ரூ. 4 தனி.

## ஆச்வலாயன க்ருஹ்யகர்ம ப்ரயோகம்

தேவநாகரியில் மூலமும் தமிழில் விளக்கவுரையும் கொண்டது. ஸந்த்யாவந்தனம், அக்னிஸந்தானம், ச்ராத்த ப்ரயோகம், ஆவணி அவிட்டம் முதலியன. 370 பக்கங்கள். விலை ரூ. 30; தபால் செலவு ரூ. 4 தனி.

## ரிக்வேதிகளின் பதினாறு சுப ஸம்ஸ்காரங்கள்

தமிழ். ரிக்வேதி பூர்வ ப்ரயோக உரை நூலாகிய இது அதனுடன் இணைக்கப்பட்டுள்ளது. தனி நூலாகவும் கிடைக்கும். 80 பக்கங்கள். விலை ரூ. 8; தபால் செலவு ரூ. 3 தனி.

மணியார்டர் அனுப்ப வேண்டிய முகவரி:

V. S. VENKATA RAGHAVACHARYAR
2. Railway Border Road.
TBM Sanatorium, Madras-600 047.

---

அன்பர்களின் கோரிக்கைகளுக்கிணங்க மீண்டும் ஒரு பொன்னான வாய்ப்பு!

# ரூ.150 பெறுமான லிப்கோ புத்தகங்கள் இலவசம்!

ரூ.1000/—ஐ எம்மிடம் முதலீடு செய்பவர்களுக்கு (இந்தியாவில் உள்ளவர்களுக்குமட்டும்) **ரூ. 150** பெறுமான அவர்கள் விரும்பும் லிப்கோ புத்தகங்கள் முற்றிலும் இலவசமாக உடனடியாக அனுப்பி வைக்கப்படும்; 3 ஆண்டுகளுக்குப் பிறகு அந்த முதலீடு **ரூ. 1350** ஆகத் திருப்பித்தரப்படும். முழுவிவரங்களுக்கும், விண்ணப்பத் தாளுக்கும், விலைப் பட்டியலுக்கும் எழுதுக.

குறிப்பு: சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டுள்ள எண்ணிக்கைக்குட்பட்டு முதலில் வரும் முதலீடுகளை மட்டுமே ஏற்றுக் கொள்ள இயலும்.

விவரங்களுக்கு:

## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி



43, ரங்கநாதன் தெரு, தபால் பை 1028
தியாக்ராயநகர், சென்னை—600 017.

போன்: 441538 வைர விழா நோக்கிப் பீடுநடை போடுவோர்!



* மெய்மறந்த ஓவியம்

நீங்கள் கேட்டவை — தராசு

# அ.தி.மு.க. இன்று



* பாலில் கற்கண்டு

* ஆனந்த். ஆங்கரை.

? ஏப்ரல் முதல் தேதியன்று யாரிடம் ஏமாந்தீர்?

! தேதி கிழிக்கும் காலண்டரிடம். 31ம் தேதியைக் கிழித்த பின் பார்த்தால் முதல் தேதியையே காணோம்!

* சேது சுந்தரம், விருத்தாசலம்.

? மதம் மனிதனுக்கு எந்த விதத்தில் அவசியம்?

! மனிதப் பண்புகளை வளர்க்க, செம்மைப் படுத்த.

* இரா. வேல்மணி, சின்னசேலம்.

? உண்மையிலேயே தாங்கள் மெய் மறந்து ரசித்த ஓவியம்?

! அஜந்தா முதல் சிகிரியா வரை குகை ஓவியங்களைப் பார்த்திருக்கிறேன், ரஜபுதன ஓவியங்கள் முதல் நாயக்கர் கால ஓவியங்கள் வரை கண்காட்சிகளிலும் கோயில்களிலும் கண்டிருக்கிறேன். அயல்நாடுகளுக்குச் செல்லும் பாக்கியமும் கிட்டியிருப்பதால் மைகெலாஞ்சிலோ முதல் நியூயார்க்கின் மியூஸியம் ஆஃப் மாடர்ன் ஆர்ட் வரை ரசித்திருக்கிறேன். நமது நவீன ஓவியர்கள் மாலி முதல் மாருதி வரை அனுபவித்திருக்கிறேன். என்றாலும் நியூயார்க் மியூஸியத்தில் இரண்டாம் உலகப் போரின் பயங்கர விளைவுகளைப் பற்றிய பிக்காஸோவின் சோகமயமான, ஒரு பக்கச் சுவர் முழுவதும் படர்ந்த, மிகப் பெரிய ஓவியம் ஏற்படுத்திய பாதிப்பு போல் வேறு எதுவும் என்னைக் கவரவில்லை. இதயம் கனக்க, கண்கள் பனிக்க அதன்முன் நின்று கொண்டிருந்தேன். மியூஸியத்தை மூடும் நேரமாகி விட்டது என்று காவலர் கூறிய போது தான் ஒரு மணி நேரமாக நின்று கொண்டிருந்திருக்கிறேன் என்பது புரிந்தது!

* க. பி. கந்தையா, பகமலை.

? அ. தி. மு. க. இன்று யார் கையில்?

! நிச்சயமாக அதன் தலைவர் கையில் இல்லை என்பது மட்டும் புரிகிறது.

* வி. எம். கருணாகரன், சின்னதாமல்செருவு.

? ஊழல் செய்பவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுப்பதாக எம். ஜி. ஆர். அறிவித்துள்ளாரே?

! அரசியல்வாதிகளின் அறிவிப்புகளெல்லாம் நிறைவேற்றப்பட்டு விடுமானால் பூவுலகில் சொர்க்கம் உருவாகிவிடும். தேவலோகத்துக்கே மதிப்பில்லாமல் போய் விடும். நம் அரசியல்வாதிகள் அப்படியெல்லாம் தேவர்களைக் கைவிட்டு விடுகிறவர்கள் அல்ல.

* அங்கயர்க்கண்ணி, திருச்சி.

? என்ன தராசு ஸார், புத்தகம் படிப்பதையே விட்டுவிட்டீர்களா?

! இல்லை தாயே. அந்தக் குற்றத்தை நான் செய்பவனல்ல. லேட்டஸ்ட் பட்டியல் தரவா?

நகைச்சுவைக்கு ''கமலா கல்யாணமே வைபோகமே.'' அகஸ்தியன் எழுதியது. மனைவி கமலா, தொச்சு அவன் வாரிசுகள் எல்லாரும் சேர்ந்து அகஸ்தியனைப் படாத பாடு படுத்தி வைப்பது ஒரு பக்கமிருக்கட்டும்; ''முன்னணி நகைச்சுவையாளர்களின் பாராட்டுக்கள்'' என்ற தலைப்பில் சில பத்திரிகை ஆசிரியர்கள், எழுத்தாளர்களை ஒரே பக்கத்தில் ஒரு கிழி கிழித்திருக்கிறாரே அகஸ்தியன் — கிளாஸ். (நந்தினி பதிப்பகம் சென்னை—90) இரண்டாவதாக தத்துவத்துக்கு ஸ்ரீமத் பகவத் கீதை. சின்மயானந்தாவின் பால் போன்ற விளக்க உரைக்குக் கற்கண்டு சேர்த்தது போன்ற தெளிவான தமிழ் மொழி பெயர்ப்பை அளித்திருப்பவர்கள் அவரது சீடர்களான வாசுதேவன், சேஷாத்திரி. (சின்மயா மிஷன் டிரஸ்ட், சென்னை—6.)

* ஆர். சாம்பசிவம், மாமல்லபுரம்.

? சோப்ராஜுக்குப் பிடித்த தமிழ்ப்படம் எது?

! என்னதானிருந்தாலும் கடைசிகாட்சியில் போலீஸ் வந்து விடுமாதலால் எந்தத் தமிழ்ப்



G.R.G.



# யார் கையில்?



* நிபந்தனையுடன் பாராட்டு

* படாதபாடு

படமுமே பிடிக்காதுதான். போலீஸ் அதிகாரி மது ஸெண்டேயைப் பிரதமரோடு சேர்த்து நாமும் பாராட்டலாம். ஆனால் கவலை அளிப்பது என்னவென்றால் சோப்ராஜ் பிடிபட்டு விட்டதால் திகார் ஜெயிலில் நடந்த சமாசாரங்கள் அடியோடு மறைக்கப்படலாம்; மறந்து போகப்படலாம். இதைத் தவிர்த்து அந்தச் சிறைச்சாலைக்கு லஞ்ச ஊழல் அரக்கனிடமிருந்து விடுதலை பெற்றுத் தரவேண்டும்.

* ஆர். ஜி. சிவக்குமார், பழனி.

? இந்த வார அரசியல் ஜோக்?

! சபாநாயகர் பி. எச். பாண்டியன் முதல் நாள் வீராவேசத்துடன் நீதிமன்றத் தீர்ப்பு ஒன்றை ரத்து செய்து சட்டசபையின் தீர்ப்பை வழங்கியதும் மறுநாள் பரம சாதுவாக அதை வாபஸ் பெற்றுக் கொண்டதும் தான்.

* மா. அய்யப்பன், நாட்டரசன்கோட்டை.*

? 'என்ன இருந்தாலும் தி.மு.க. ரிப்பேரான கடிகாரம்தான், ரிப்பேர் ரிப்பேர்தான்' என்று காளிமுத்து தி. மு. க. வெற்றியைக் குறை கூறி உள்ளாரே?

! ரிப்பேரான கடிகாரத்தைப் பழுது பார்க்கலாம். சுக்கலாகக் கீழே போட்டு உடைத்த கடிகாரத்தை என்ன பண்ணுவது?

* சேது புகழேந்தி, பழனி.

? நீங்கள் சமீபத்தில் மனதாரப் பாராட்டியது யாரை? ஏன்?

! "இலாகா மாற்றத்துக்குக் காரணம் ஏதும் கூறப்படாத போது, முதல்வருக்கு என்னுடைய செயலாற்றலில் திருப்தி ஏற்படவில்லை என்ற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது" என்று கூறித் தன்மானத்துடன் தமது அமைச்சர் பதவியை ராஜினாமா செய்த கே. ஏ. கே., தொடர்ந்து, "எம். எல். ஏ. பதவியும் இந்தக் கட்சி எனக்குக் கொடுத்தது தான்; எனவே அதையும் துறக்கிறேன்" என்று நேர்மையுடன் கூறி கட்சியிலிருந்தே வெளியேறியும் இருக்கிறார். தன்மானத்தைக் காக்க முற்பட்ட போதே, நேர்மையையும் கடைப்பிடித்த கே. ஏ. கே. அதற்காகப் பாராட்டப்பட வேண்டியவர்தான். அவரை வாழ்த்தும்போதே இந்தப் பாராட்டை வாபஸ் பெற நேராது எனவும் நம்புவோம்.

* பாலா, கோவை.

? மறைந்த கோவைத் தொழிலதிபர் ஜி. ஆர். ஜி.யை உங்களுக்குத் தெரியுமா?

! தொழில்கள் நடத்தி வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதே ஒரு நற்பணிதான். ஆனால் ஒருவர் வெற்றிகரமாகத் தொழில்கள் நடத்தி நிறையப் பணம் சம்பாதித்தார் என்பதற்காக மட்டும் அவரைப் பாராட்டிவிட முடியாது. சம்பாதித்த பணத்தை என்ன செய்தார் என்று பார்க்கும்போதுதான் வாழ்த்தத் தோன்றும். அப்படிப் பார்க்கும் போது Gathered Rupees and Gave என்பதால் தான் G R G என்று அழைக்கப்பட்டாரோ என்று எண்ணத் தோன்றுகிறது. கொடுத்ததையும் திட்டமிட்டுப் புத்திசாலித்தனமாகக் கொடுத்தார். அறக்கட்டளைகளை ஏற்படுத்தி அவற்றின் மூலம் பல பள்ளிகள், கல்லூரிகளை நடத்தி அரும்பெரும் கல்விப் பணி ஆற்றினார். செய்வது எதையும் நேர்த்தியாகச் செய்வார். சிந்தாமணி சூபர் மார்க்கெட் அவர் நிர்வகித்த வரையில் இந்தியாவுக்கே எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தது. அவர் எடுத்த காரியம் யாவிலும் கைகொடுத்து சிறக்கச் செய்தவர் மனைவி சந்திரகாந்தி. இப்போது அந்த மென் கரங்கள் உதவும் கரங்களாக அல்லாமல் முழுப் பொறுப்புக்களையும் தாங்கும் கரங்களாகி விட்டன. பலம் பெற்றுத் திகழட்டும்.



* தீர்ப்பு—வாபஸ்

---

* *ரூ. 10 பரிசு பெறுபவர்:*

*மா. அய்யப்பன்,*
*10/7, மாணிக்கவல்லி தெரு,*
*நாட்ட...ன்கோட்டை*
*— 623 556.*

பத்தரை மாற்று தங்கமா, இல்லை.....?



லலிதாஸ்.
இலங்கை வங்கிகளுக்கு,
அரசு அங்கீகாரம் பெற்ற
தங்கத் தர நிர்ணயாளர்கள்.



இலங்கை வங்கிகளில் தங்கத்தை செக்யூரிட்டியாக கொடுத்து-கடன் வசதி பெற வருபவர்கள் ஒரு நபரை திருப்தி செய்ய வேண்டும்–அதுவே லலிதா நிர்வாகத்தினர். 1975லிருந்து இலங்கையின் அரசு அங்கீகாரம் பெற்ற தங்கத் தர நிர்ணயாளர்களாக விளங்குபவர்கள். 35 வருடங்களாக, தங்க நகைத் தொழிலில் கடைப் பிடித்து வந்த இணையற்ற தரமே இந்த ஆஸ்தான ஸ்தானத்திற்கு காரணம். இன்றைக்கு அதுவே அவர்களை இலங்கையிலேயே தங்கத்தில் முதன்மையானவர்கள் என்று பிரசித்தி பெறச் செய்துள்ளது.

முதன்மையானவர்கள் என்ற இந்த ஸ்தானமே அவர்களை உலக அரங்கில் போட்டிக்கு எடுத்துச் சென்றுள்ளது. ஆனால் ஒரு மாற்றம். ஆம், ஸ்பெயின் நாட்டிலுள்ள மாட்ரிட் என்ற நகரில் நடந்த போட்டியில், லலிதாவின் தரம் நிர்ணயிக்கப் பட்டது. முடிவு : 1983 மற்றும் '84ஆம் ஆண்டுகளுக்கான 'மாசுமறுவற்ற தங்கத்தரத்தை மேற்கொள்பவர்கள்' என்ற பரிசு லலிதாவிற்கு அளிக்கப் பட்டது.

இந்த மாசுமறுவற்ற தங்கத் தரத்தைக் கொண்ட நகைகளை லலிதாவின் ஆசியாவிலேயே மிகப் பெரிதான ஷோரூமில் காணலாம். ஆம். இந்த லலிதாவின் தங்கத் தர்பார் கொழும்புவின் ஒரு முக்கிய வீதியில் அமைந்திருக்கிறது. அங்குள்ள ஆயிரக்கணக்கான நகைகள் ஒவ்வொன்றும் உங்கள் அழகுக்கு ஓர் ஆராதனையாக விளங்கக் கூடிய கலை படைப்புகள்.

இப்பொழுது லலிதாஸ் உங்களுக்கு அளிப்பது 2500க்கும் மேற்பட்ட ஈடு இணையில்லாத தங்க, வைர மற்றும் வெள்ளி நகைகள். கலைக்கண்ணோடு, நுண்ணிய வடிவுகளில் பிறந்துள்ள ஒவ்வொன்றும் மணிக்கணக்காக, நாட்கணக்காக எழு திறன் வாய்ந்த கலைஞர் குழுக்களின் உழைப்பின் பிறப்புகளே.

மேலும், இவற்றைக்காண ............... உங்களைக் கடல் கடந்து இலங்கைக்கு செல்லவேண்டும் என்று கூறவில்லை.




இப்பொழுது இங்கு சென்னையிலேயே.

 லலிதா ஜுவல்லரி மார்ட்

123 உஸ்மான் ரோடு, பனகல் பார்க்,
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 445939, 442601.

# மதுரை மாவட்டத்தில் கலெக்டர் எடுத்த நடவடிக்கைகள்



'கல்கி' 9.3.86, 16.3.86 ஆகிய இரண்டு இதழ்களிலும் மதுரை மாவட்டம் பற்றிய பல்வேறு பிரச்னைகள் எழுதப்பட்டுள்ளன. அப்பிரச்னைகளின்மேல் அரசு எடுத்த, எடுத்து வரும், எடுக்கவுள்ள நடவடிக்கைகளைத் தொகுத்து இத்துடன் இணைத்து அனுப்பியிருக்கின்றேன்.

— இரா. வரதராஜுலு
மாவட்ட ஆட்சித் தலைவர், மதுரை.

**ஆண்டிபட்டி மருத்துவமனை பற்றி:**

ஆண்டிப்பட்டி அரசு மருந்தகத்தை 24 படுக்கைகள் கொண்ட மருத்துவமனையாக மாற்றுவதற்குரிய கருத்துருக்கள் ஒப்புதலுக்காக அரசின் பரிசீலனையில் உள்ளன. தற்போது தினம் தேவைப்படும் அளவுக்கு டெட்டனஸ் டாக்சைடு மருந்து வாங்கி நோயாளிகளுக்கு உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. ஆண்டிபட்டி மருத்துவமனைக்கென குளிர்சாதனப் பெட்டி (பிரிஜ்) ஒன்றும் பெறப்பட்டுவிட்டது. விரைவில் இது நிறுவப்படுவதுடன் டெட்டனஸ் டாக்ஸைடு போன்ற மருந்துகள் தேவைப்படும் அளவிற்கு இருப்பில் வைக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

**நல்லபெருமாள்பட்டியில் குடிநீர் வசதி:**

இக்கிராமத்திற்கு 1983ம் ஆண்டு வறட்சியின்போது திறந்த வெளிக் கிணற்றிலிருந்து மூன்று குதிரை வேகம் உள்ள பம்பு மூலம் தண்ணீரை எடுத்துத் தானியங்குத் தொட்டியின் மூலம் கிணற்றின் அருகிலேயே குழாய்கள் அமைத்து விநியோகம் செய்யப்பட்டது. அந்தக் கிணறு தற்போது வற்றிப் போய்விட்டது. கிணற்றின் அடிப்பாகம் கடும் பாறையாக இருப்பதால் ஆழப்படுத்துவதற்கும் வாய்ப்பில்லை. நல்ல பெருமாள்பட்டிக்கு மேலும் ஓர் அடிகுழாய் அமைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இக்கிராமத்தில் உள்ள ஆதி திராவிடர் குடியிருப்பில் 1983ம் ஆண்டு வறட்சியின்போது அமைக்கப்பட்ட அடிகுழாய் இன்றும் நல்ல முறையில் இயங்கித் தேவையான குடிநீரைத் தந்து கொண்டிருக்கிறது.

**பாப்பமாள்புரம் ஆதி திராவிடர் குடியிருப்பு பொதுக் கழிப்பிடம் சம்பந்தமாக:**

இப்பகுதியில் இரண்டு கழிப்பிடங்கள் உள்ளன. இவற்றை இன்னும் நல்லமுறையில் பராமரிக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுவிட்டது. தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தின் மூலம் ஒரு நவீனக் கழிப்பிடம் கட்டுவதற்கும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**பாப்பம்மாள்புரம் கோவில் இடத்தை பள்ளி கட்டிடம் கட்ட அளிப்பது சம்பந்தமாக:**

குறிப்பிட்டுள்ள புல எண் 2173 பட்டா நிலமாகும். பள்ளிக்கூடம் கட்டுவதற்கு அரசு நிலம் எதுவும் கிடையாது. அவசியமானால் நில ஆர்ஜிதம் செய்துதான் ஆக வேண்டும். இது பரிசீலிக்கப்படுகிறது.

**கும்பக்கரை அருவி சம்பந்தமாக:**

குறிப்பிட்டபடி கும்பக்கரை நீர்வீழ்ச்சியில் பொது மக்கள் வசதிக்காக 3.3.1986ல் தேவையான எச்சரிக்கை பலகை நிறுவப்பட்டுள்ளது.

**திருமங்கலம் நகராட்சியில் குடியிருப்புக்கு ஒதுக்கப்பட்ட இடம் தொழில் பகுதியாக வகைப்படுத்துதல் — வீடு கட்டும் வரைபடம் ஒப்புதல் அளித்தல் தொடர்பாக:**

திரு ஆர். தனபாலன் நகராட்சியில் அங்கீகரிக்கப்படாத மனைப் பிரிவிலிருந்து சட்டத்திற்கு புறம்பாக வீட்டு மனை வாங்கியுள்ளது நகராட்சிக்குச் சம்பந்தமில்லாததாகும். 100 வீடுகள் கட்டுவதற்கு புளூ பிரிண்ட் (Blue Print) தயார் செய்து விற்றுள்ளது நகராட்சி அனுமதி பெறப்படாத மனைப் பிரிவாகும். பி.ஆர்.சி. காலனி மற்றும் ஹோமியோபதி மருத்துவக் கல்லூரி கட்டுவது சம்பந்தமாகவும் நகராட்சியிலிருந்து இதுவரை எந்தவிதமான அனுமதியும் கொடுக்கப்படவில்லை.

மதுரை மாநகராட்சி:

அ) ஆடு மாடு அடிக்கும் தொட்டி இடம் மாற்றம் செய்வது தொடர்பாக:

ஆடுமாடு வதைக்கும் இடம் தற்போதுள்ள இடத்திலிருந்து ஒத்தப்பட்டி அருகில் மாற்றப்பட உள்ளது. நவீன முறையில் புதிதாகக் கட்டப்பட்டு வருகிறது.

ஆ) எல்லிஸ் நகர் மயானத்தை வேறு இடத்திற்கு மாற்றுவது சம்பந்தமாக:

வீட்டு வசதி வாரியச் செயலாளர் இந்த இடத்தைப் பார்வையிட்டு, தொடர்புடைய அதிகாரிகளிடம் தக்க அறிவுரைகள் வழங்கியுள்ளார்கள். நல்ல முடிவு எடுப்பதற்காக மாநகராட்சியும் பேச்சு வார்த்தையில் பங்கேற்றது. விரைவில் அனைத்துத் தரப்பினருக்கும் திருப்தியளிக்கும் வகையில் முடிவு மேற்கொள்ள விரைவான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

இ) கோயிலைச் சுற்றி சுற்றுலாப் பேருந்துகள் நிறுத்தப்படுவது சம்பந்தமாக:

தற்சமயம் வேறு இடம் இல்லாததால் பேருந்துகள் கோவிலைச் சுற்றியுள்ள நான்கு சித்திரை வீதிகளில் நிறுத்தப்படுகின்றன. பயணிகளின் வசதிக்கேற்ப ஒரே இடத்தில் எல்லாச் சுற்றுலாப் பேருந்துகளையும் நிறுத்துவதற்குத் தகுதியான இடம் தெரிவு செய்யப்பட்டு வருகிறது. வசதியான, பொருத்தமான இடம் முடிவு செய்யப்பட்டவுடன் இப்பிரச்னை முற்று பெறும்.

ஈ) நேரு நகருக்கு அடிப்படை வசதிகள் ஏற்படுத்துவது சம்பந்தமாக:

51 வது வார்டிலுள்ள நேரு நகர், புதிதாக விரிவாக்கம் செய்யப்பட்ட பகுதி. மதுரை நகரில் விடுபட்ட பகுதிகளிலும், விரிவாக்கம் செய்யப்பட்ட பகுதிகளிலும், பாதாளச் சாக்கடைத் திட்டம் செயல்படுத்தப்படும் பொழுது நேரு நகர் பகுதியும் சேர்க்கப்படும். தற்போது கழிவு நீர் அகற்றுவதும், குடிநீர் வழங்குவதும் லாரிகள் மூலம் செய்யப்பட்டு வருகிறது.

உ) நீச்சல் குளம் சம்பந்தமாக:

நவீன நீச்சல் குளத்தில் எல்லா வசதிகளும் உள்ளன. போதுமான மிதவைகளுமுள்ளன. நீச்சல் கற்றுக் கொடுக்கப் பயிற்சியாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். நீச்சல் குளத்தின் ஆழம் எவ்வளவு என்பது தெளிவாக ஆங்காங்கே குறிக்கப்பட்டுள்ளது. பாதுகாப்பு வசதிகள் சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளன.

செல்லம்பட்டி ஊராட்சி ஒன்றியம், நல்ல பெருமாள்ப்பட்டியில் அடிப்படை வசதிகள், ஈச்சம்பட்டியில் தண்ணீர் வசதி, அம்பட்டையன்பட்டி தண்ணீர் வசதி சம்பந்தமாக:

ஆதி திராவிடர் குடியிருப்புக்கு ஏழு மாதத்திற்கு முன்பு ஓர் அடி குழாய் அமைக்கப்பட்டு அதுவும் நல்லமுறையில் இயங்கி வருகின்றது. அம்பட்டையன்பட்டி கிராமத்தில் 1980 ஆம் ஆண்டில் இரண்டு அடி குழாய்கள் அமைக்கப்பட்டன. நடுத் தெருவில் அமைந்துள்ள அடி குழாய் நீர் வற்றிப் போய் விட்டதால், ஊறஊற, தண்ணீரை அடிகுழாய் மூலம் பொது மக்கள் எடுத்து வருகிறார்கள். மற்றொரு அடி குழாய் மண் அடைபட்டு இருந்தது. அது தற்போது சுத்தப்படுத்தப்பட்டு அடிகுழாயும் பொருத்தப்பட்டுள்ளது.

தேவதானப்பட்டி—மஞ்சளாறு அணை பாசன வசதி பற்றி:

மஞ்சளாறு அணை பாசன வசதிகளை ஒழுங்குபடுத்துவதற்காக ஒப்புதலளிக்கப்பட்ட விதிமுறைகளின்படியும் அவ்வப்போது புது வாய்க்கால் மற்றும் பழைய வாய்க்கால் பாசன விவசாயிகள் கூட்டம் நடத்தி அவர்களது கருத்துக்களை அறிந்து தண்ணீர்ப் பங்கீடு செய்யப்பட்டு வருகிறது.

வெங்கடாசலபுரத்தில் குடிநீர் வசதி—ரோடு போடுவது தொடர்பாக:

வெங்கடாசலபுரத்தில் ரூபாய் 73,000 செலவில் 10,000 லிட்டர் கொள்ளளவு கொண்ட மேல்நிலைத் தொட்டி ஒன்று கட்டப்பட்டு குடிநீர் விநியோகம் செய்யப்பட்டு வருகிறது. இது தவிர இவ்வூரில் ஏழு கைப் பம்புகள் அமைக்கப்பட்டு அவை நல்ல முறையில் இயங்கி வருகின்றன. மேலும் குடிநீர் வடிகால் வாரியத்தின் மூலம் ஒரு லட்சம் லிட்டர் கொள்ளளவு கொண்ட மேல்நிலைத் தொட்டி கட்டப்பட்டு வருகிறது. விரைவில் இதுவும் முடிந்துவிடும். தற்போது இவ்வூரில் குடிநீர் தட்டுப்பாடு இல்லை.

தேனி—வெங்கடாசலபுரம் சாலையின் நீளம் 10.6 கி.மீ. இதில் 2.6 கி.மீ. தேனி ஊராட்சி ஒன்றியத்தைச் சார்ந்தது. இச்சாலை 82-83 ம் ஆண்டு தன்னிறைவுத் திட்டத்தில் எடுக்கப்பட்டு இரு அடுக்கு கல் பரப்பி வேலை நடைபெற்று முடிந்துவிட்டது. இவ்வேலை சம்பந்தமாக புகார் மனு ஒன்று புலனாய்வுத் துறையின் ஆய்வில் உள்ளதால் இச்சாலையில் மேலும் பணிகள் மேற்கொள்ள முடியவில்லை. புலனாய்வு விரைவில் முடியும்; பணிகளும் எடுத்துக் கொள்ளப்படும்.

சிலயம்பட்டி சாலை சம்பந்தமாக:

சிலயம்பட்டி— அழகாபுரி சாலையின் ஒரு பகுதி தேனி ஊராட்சி ஒன்றியத்தையும் மற்ற பகுதி சின்னமனூர் ஊராட்சி ஒன்றியத்தையும் சார்ந்தது. இச்சாலை பேருந்து வழித்தட மேம்பாட்டுத் திட்டத்தில் எடுக்கப்பட்டு

வேலை முடிந்துவிட்டது. பராமரிப்புக்கு எடுத்துக் கொள்வது சம்பந்தமான கருத்துருக்கள் அரசின் ஒப்புதலுக்காகப் பரிசீலனையில் உள்ளன.

பெரியகுளம் நகருக்குள் நுழையும் இடத்தில் கட்டப்பட்டுள்ள புதிய பாலம் தொடர்பாக:

இப்பாலத்தின் மேற்குப் பகுதியிலுள்ள அணுகு சாலை அமைக்கப்பட வேண்டிய இடம் தனியாருக்குச் சொந்தமான பட்டா நிலமாகும். நில உரிமையாளர் இதுவரை இசைவு தரவில்லை. அவரது இசைவு விரைவில் பெறப்பட்டு அணுகு சாலை அமைக்கப்படும்.

டி. காமக்காபட்டியில் பட்டா வழங்கல் சம்பந்தமாக:

டி. காமக்காபட்டி கிராமத்தில் உள்ள 32 குடும்பத்தினருக்கு கள்ளர் சீரமைப்புத் துறையின் மூலம் கடன் வழங்கியும் வீடுகள் கட்டியும் தரப்பட்டுள்ளன. கிராமத்தினருக்கு வீட்டடி பட்டா வழங்குவதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

சோத்துப்பாறை, நெடும்பட்டி தளம் மற்றும் சோத்துப்பாறை அகமலை கிராமம் வரை சாலை வசதி சம்பந்தமாக:

பன்னிரண்டு கி.மீ. நீளம் உடைய இச்சாலையை மேம்படுத்தவும் சிறு பாலங்கள் கட்டவும் ரூ 25.60 இலட்சம் செலவிட வரும் நிதியாண்டில் நிலமற்றோர் வேலை வாய்ப்பு உறுதி திட்டத்தின் கீழ் கருத்துருக்கள் பரிசீலனையில் உள்ளன. பெரும் பகுதி நீளமுள்ள பாதை வனத் துறையினர் அனுமதியுடன் தான் அமைக்கப்படுதல் வேண்டும். உரிய நிலம் கையகப்படுத்தப்படவும், சாலை அமைத்திடவும் மத்திய அரசின் அனுமதி வேண்டும். மேலும் சோத்துப்பாறையிலிருந்து ஊத்துக்காடு, ஊரடி வழியாக அகமலை செல்வதற்கும் போடி நாயக்கனூரிலிருந்து அகமலைக்குச் செல்லும் சாலை அமைக்கவும் வரும் நிதியாண்டில் கிராமப்புற நிலமற்றோர் வேலை வாய்ப்பு உறுதித் திட்டத்தின் கீழ் கருத்துருக்கள் பரிசீலனையில் உள்ளன.

அகமலையில் குடிநீர்த் தேக்க தொட்டி சம்பந்தமாக:

கடந்த ஆண்டு வறட்சியினால் இந்தத் திட்டம் செயல் படாமல் இருந்தது. தற்பொழுது அவற்றை நிவர்த்தி செய்ய உரிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

அகமலையிலுள்ள கிராமங்களை பெரியகுளம் வட்டத்துடன் இணைப்பது சம்பந்தமாக:

இந்த நியாயமான கோரிக்கை சம்பந்தமாக உரிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

அகமலையில் துணை சுகாதார நிலையம் செயல் திறன் சம்பந்தமாக:

இங்கு 8.3.1986ல் ஒரு பெண் பணியாளர் நியமிக்கப்பட்டு நல்ல முறையில் பணியாற்றி வருகிறார்.

திருமதி உமாதேவி பற்றி வந்த கட்டுரை தொடர்பாக:

நகைகளை அடகு வைத்து, வங்கியிலிருந்து வாங்கிய பணம் ரூபாய் பத்தாயிரத்தைக் கடனாகப் பெற்றிருந்த திருமதி அம்சம்மா என்பவர், 86 பிப்ரவரி மாதத்தில், வட்டித் தொகையின்றி, அசலைத் திருப்பிக் கொடுத்து விட்டதாகவும், வட்டித் தொழில் செய்வதற்கென கடனாகப் பெற்றிருந்த பணத்தில் ரூபாய் பதினேழாயிரத்தை ஆனி மாதக்கடைசிக்குள் திருப்பிக் கொடுத்துவிடுவதாகப் பஞ்சாயத்தார் முன்னிலையில் ஒப்புக்கொண்டுள்ளார் என்றும் திருமதி உமாதேவி விசாரணையில் தெரிவித்துள்ளார்.

திருமதி உமாதேவியின் குடும்பத்தின் கஷ்ட நிலையைக் கருத்திற் கொண்டு, அவரின் கல்வித் தகுதிக்கு ஏற்ப அவருக்கு வேலை வாய்ப்பு வழங்க, மதுரை மாநகராட்சி ஆணையருக்குப் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது.

(கல்கி மேற்கொண்ட சமுதாயப் பணியின்போது மதுரை கலெக்டர் திரு ஆர். வரதராஜுலு அவர்களிடம் நமது நிருபர்கள் கவனத்திற்குக் கொண்டு வந்த பிரச்னைகளில் பெரும்பாலனவற்றுக்கு உடனடியாக நடவடிக்கை எடுத்தது குறித்து மதுரை மாவட்ட மக்களின் சார்பில் அவருக்குக் கல்கி நன்றி செலுத்துகிறது. — ஆசிரியர்)


அடுத்த இதழ்...

பெரியார் மாவட்டத்தில் கல்கி — II

* அருமையான வாய்ப்பிருந்தும் அரசுக்கு மனமில்லை!
— அவதிப்படும் அந்தியூர் விவசாயிகள்

* "பனையேறும் எங்களுக்கு பஸ்ஸேற வழியில்லீங்க..."
— கவர் ஸ்டோரி

மற்றும்

'மூட் அவுட்' ஆன பெரியார் மாவட்ட கலெக்டருடன் ஒரு பேட்டி!







# கிழக்கே ஓர் உலகம்

14

கடலின் அடிவாரத்தில் கண்கவர் அழகுகள்

லம்பாஸாவில் மிகப் பெரிய தொழிலதிபரும், சங்கம் பள்ளியின் லம்பாஸாக் கிளைத் தலைவருமான சிவநாராயண், ஜுரத்தைப் பொருட்படுத்தாமல் என்னை 'ஸாவு ஸாவு' என்ற நகரத்துக்கு அவரது காரில் அழைத்துப் போனார்.

பதினொருமணி அளவில் நாங்கள் அந்நகர மேயரின் அலுவலகத்தை அடைந்த போது மேயர் உள்பட சில இந்தியர்களும் ஃபீஜியர்களும் என்னை வரவேற்க நின்றிருந்தார்கள். மேயர் சதீஷ் குலாப்தாஸ் இளைஞராக, நடிகர் சேகர் கபூரின் ஜாடையுடன் இருந்தார். வியாபார நிமித்தமாக ஃபீஜித் தீவுக்கு வந்த குஜராத்தி வகுப்பைச் சேர்ந்தவர்.

ஃபீஜி தீவுகளில் தேங்காய் பிரதான விளைச்சலாக ஆகி வருகிறது. தேங்காய் எண்ணெய் எடுக்கக் கடற்கரையோரமாக ஒரு மிக நவீன ஆலை கட்டியிருக்கிறார்கள். அதைப் போய்ப் பார்த்துப் பிரமித்துப் போனேன். கொப்பரையிலிருந்து எண்ணெய் எடுப்பதில்லை. பச்சைத் தேங்காயை bake செய்து உலர வைத்து எண்ணெய் எடுக்கிறார்கள். கப்பலில் எண்ணெய் ஏற்ற ஆலையிலிருந்து துறைமுகம் வரை பிரும்மாண்டமான குழாய்கள் இருக்கின்றன. கப்பலில் தயாராக இருக்கும் ட்ரம்களில் குழாயைத் திறப்பது போல் பைப்புகளிலிருந்து நிரப்பி 'ஸீல்' செய்துவிடுகிறார்கள்.

ஸாவு ஸாவுவின் தெற்குப் பகுதியில் நிலத்தில் இரண்டு இடங்களில் வெந்நீர் ஊற்றுக்கள் (hot springs) இருக்கின்றன. 'தளதள' வென்று கொதிக்கும் நீரில் உள்ளூர்ப் பெண்கள் அவர்களது உணவான மரவள்ளிக் கிழங்கைத் துணிப்பையில் போட்டு வேக வைத்துக் கொண்டிருந்தார்கள்.

தெற்குப் பஸிஃபிக் 'சமுத்திரத்தில் பவழங்கள் மிகப் பிரசித்தம் என்றார்கள். பலவித நிறங்களில் இங்கே பவழங்கள் இருக்கின்றன. கறுப்புப் பவழம் மிக அரிதானது; விலை உயர்வானது.

சமுத்திரத்திற்கடியில் இருக்கும் பவழக் கொடிகளைப் பார்க்கக் கூடிய வசதி இங்கே சில படகுகளில் செய்யப்பட்டிருக்கிறது.

வாஸந்தி

ஸாவுஸாவுவிலிருந்துதிரும்பி வரும்வழியில், 'காரல் பீச் ரிஸார்ட்' என்கிற இடத்தில் இத்தகைய படகு ஒன்றில் ஏறி, கடலின் அடிவாரத்தைக் கண்களால் அளையும் அரிய வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அன்று வானம் நிர்மலமாய் இருந்தது. காற்றும் வேகமாக இல்லாததால் கடல் அமைதியாக விளங்கியது. படகின் கண்ணாடி அடிப்பாகத்தின் வழியாகக் கடலின் அற்புத ரகசியங்களைப் பார்க்க முடிந்தது. அப்படி தெளிவான ஒரு காட்சியைக் காண முடியும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை! ஆச்சரியத்தில் திக்கு முக்காடிப் போனேன். பவழக் கொடிகளும் கடல் நுரைகளும் வேறு பல ஜந்துக்களும் கண்ணை அகற்ற முடியாதபடிக்கு அற்புத அழகுடன் காட்சி அளித்தன.

கடற்கரையில்வெள்ளைக்காரர்கள்சூரியக் கிரணங்களிலிருந்து உடலைக் காத்துக் கொள்ள 'Sun Protection Creme'மை அப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

**நா**ன் ஃபீஜியில் இருக்கும் கடைசி இரண்டு நாட்கள் ஒய். பி. ரெட்டியின் வீட்டில் தங்க வேண்டும் என்று ஏற்பாடு செய்திருந்தார்கள். இவர், தென் இந்திய ஐக்கிய சங்கத்தின் தலைவர்; இன்றைய ஃபீஜி இந்தியர்களில் மிக உன்னத நிலையை அடைந்து பெரும் பணக்காரராக விளங்குகிறவர். லொட்டக்காவில் அவரது வீட்டையும் அதிலிருந்த வசதியான வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களையும் பார்த்தால் அவருடைய பெற்றோர் கூலி வேலைக்காரர்களாய் வந்தவர்கள் என்று நிச்சயம் நம்ப முடியாது. பல ஐந்து நட்சத்திர ஓட்டல்களும் கம்பெனிகளும் இன்று ரெட்டிக்கு சொந்தமானவை. வயது நாற்பத்தைந்துக்குள்தான் இருக்கும். துருதுருவென்று கெட்டிக்காரத்தனம் கண்ணில் சுடர் விடுகிறது. அவருடைய அழகிய மனைவி இத்தனை செல்வம் இருந்தும் துளிச் சோம்பல் இல்லாமல் தாமே சமையல் செய்கிறார். "இரவு அழுக்குப் பாத்திரங்களைப் போட்டு வைப்பது எனக்குப் பிடிக்காது" என்று கூறித் தாமே மளமளவென்று தேய்த்துக் கழுவுகிறார். பெண்ணையும் பிள்ளையையும் வீட்டு வேலையில் நன்றாகப் பழக்கியிருக்கிறார்.

இந்த அடக்கமும், உழைப்பார்வமும் தான் இவர்கள் எல்லாருடைய பலமும் என்று நான் அங்கு கால் வைத்த நாளிலிருந்து புரிந்து கொண்டிருந்தேன். எத்தனை நல்ல நிலைமையிலிருந்தாலும் எந்த வேலையையும் இவர்கள் இளப்பமாக நினைக்கவில்லை. இதற்கு மற்றொரு உதாரணமாக என். கே. நாயுடுவின் மனைவி லொட்டோக்காவில் ஒரு இந்திய சைவ சிற்றுண்டி சாலையை நடத்திக் கொண்டிருக்கிறார். நான்கு பெண்களை வேலைக்கு வைத்துத் தம் கையாலேயே மசால் தோசையையும், வடையையும் மற்ற எல்லாவற்றையும் செய்து மலிவாகத் தரமானதாக விற்கிறார். மதுரையைச் சேர்ந்தவர்.

மூன்று நான்கு பிரிவுபசார விருந்துகளை ஏற்றுக் கொண்டு, ஃபீஜி மக்களின் பேரன்பைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு, பிரியா விடைபெற்று எனது சுற்றுப்பயணத்தின் அடுத்த கட்டமான ஆஸ்திரேலியாவுக்குப் பயணமானேன்.

(தொடரும்)





# சரித்திரம் பேசும் சமணர் கோயில்



* சமணக் கோயில்

கொங்கு மண்டலம் என்பது இருபத்து நான்கு கோட்டங்களைக் கொண்டது. இதில் குறுப்பு நாடு என்பது ஒரு கோட்டம். இதற்கு முப்பத்திரண்டு கிராமங்கள் உண்டு. அப்படிப்பட்ட குறுப்பு நாட்டின் தலைநகராக விளங்கியதுதான் பெரியார் மாவட்டம் பெருந்துறை ஊராட்சி ஒன்றியத்திலுள்ள விஜய மங்கலம். இதற்கு தமிழ் மங்கை, செந்தமிழ் மங்கை, ஓங்கு தமிழ்சேர் விஜயமங்கை என்று பல்வேறு அழகிய பெயர்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

பெருங்கதை ஆசிரியரான கொங்குவேளிர் பெருமான், சிலப்பதிகாரத்தின் உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் ஆகியோர் பிறந்து வளர்ந்து வாழ்ந்தது இந்த ஊரில்தான். நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவர் ஊர் இதன் பக்கத்திலுள்ள சீனாபுரம் என்பது. இந்தச் சமணக் கோயிலில்தான் பெருங்கதையும் அரங்கேற்றப்பட்டது.

சைவ, வைணவ ஆலயங்களோடு சமண மதத்தின் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் எட்டாவது தீர்த்தங்கரரான சந்திரபிரபா தீர்த்தங்கரரின் ஆலயம் அமைந்திருப்பதுதான் இவ்வூரின் முக்கிய சிறப்பு. தமிழகத்திலுள்ள மூன்று சமணக் கோயில்களில் இதுவும் ஒன்று. சிரவண பெலகொளாவிலுள்ள கோமதீஸ்வரர் சிலையை நிர்மாணித்த சாமுண்டராயர் என்னும் மன்னரின் தங்கையான புளியமங்கை கடைசி காலத்தில் இந்த விஜயமங்கலத்தில் தவம் புரிந்துதான் உயிர்நீத்தார்.

இங்குள்ள கல்வெட்டுக்களில், 'தானம்' பற்றிக் குறிப்பிடும் போது, கன்றோடு கூடிய பசுவைத் தானம் கொடுப்பதை முழுப் பசுதானம் என்றும், சினைப் பசுவைத் தானம் கொடுப்பது முக்கால் பசுதானம் என்றும், பருவம் வந்த பசுவினைக் கொடுப்பது அரைப் பசுதானம் என்றும், பருவமடையாத கன்றைக் கொடுப்பது கால் பசு தானம் என்றும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. கோயில் நிலங்களைக் குத்தகைக்கு உழுபவர்கள் குத்தகைத் தொகை தராவிட்டால் செய்யப்படும் ஜப்தியை, 'மண்கலம் தவிர்த்து வெண்கலம் கொள்க' என்று குறிக்கப்பட்டுள்ளது. (ஆர். எம். வீ. கவனிக்க!)



* சொக்கலிங்கம்

இன்று நெட்டைக் 'கோபுரம் என்று அழைக்கப்படும் இந்தச் சமணக் கோயில் மத்திய அரசின் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் வசமுள்ளது. கோயிலைச் சுற்றிப் பார்த்த போது, செதுக்கப்பட்டிருந்த சிற்பங்களும், ஓவியங்களும் ஒரு பிரமிப்பை உண்டாக்கின. முதலாவது தீர்த்தங்கரரான ஆதி நாதருக்குக் கோயில் எழுப்புவதற்காகப் போடப்பட்ட அஸ்தி வாரம் பாதியில் நிற்பதையும் கண்டோம். கோயிலின் பல இடங்கள் வழிபடுபவர்களின் தலையில் எப்போது விழுந்து பரமகதி அருளுமோ என்ற நிலையில்தான் இருக்கின்றன; கவனிப்பே இல்லை.

கோயிலின் பூஜாரியான வி. எஸ். நாகராஜ் குமார் ஜெயின், "வருஷத்துக்கு நூறு பேர் இந்தக் கோயிலுக்கு வந்தா அதுவே பெரிய விஷயமுங்க. மத்திய அரசாங்கம் வருஷத்துக்கு ஐம்பத்தைந்து ரூபாய் கொடுத்து இந்தக் கோயிலைப் பராமரிக்கச் சொல்லுகிறது. எப்படீங்க முடியும்?" என்றார்.

உள்ளூர்த் தமிழாசிரியரான சொக்கலிங்கம் அந்தக் கோயிலைப் பற்றியும் மற்ற சிறப்புக்கள் பற்றியும் விளக்கிக் கொண்டே வந்தபோது, இப்படிப்பட்டதொரு சிறப்பு வாய்ந்த கோயிலைக் கூடவா அரசு பராமரிக்கவில்லை என்ற துக்கம்தான் நெஞ்சை அடைத்தது.

— நமது நிருபர்.



* நாகராஜ் குமார் ஜெயின்




**பக்கம் பார்த்துப் பேசுகிறேன்**

**— மு. மேத்தா**

"என் பயணத்தின் முடிவு இதுதான்: மன்ஜில் (மாளிகை) தொலைவில் இருந்தது. மன்ஜில் (மாளிகை) தொலைவிலேயே இருக்கிறது....." என்று ஓர் உருதுக் கவிஞன் தன் கவிதையைத் தொடங்குகிறான்.

அவனுடைய பயணம் மட்டுமல்ல— இலட்சிய தாகங்களோடு புறப்படுகிற எல்லோருடைய பயணமும் இப்படித்தான்.

எத்தனையோ ஆண்டுகளுக்குமுன் புறப்பட்டபோது 'இலக்கு' தொலைவில் இருந்தது.

இப்போதும்—'இலக்கு' தொலைவிலேயே இருக்கிறது:

பயணப்பட்ட பாதைகளின் நீளங்களையும் பயணப்பட்ட வாழ்க்கையின் காலங்களையும் மனம் கணக்குப் போட்டுப் பார்க்கும்போது மலைப்பாகவே இருக்கிறது.

ஒவ்வொரு நாளையும் உதறி உதறி உதிர்த்துக் கொண்டிருக்கும் நாட்காட்டிகூட சில சமயங்களில் நம்மைப் பார்த்து நையாண்டி செய்யலாம்.

ஆண்டின் கடைசியில் அந்த நாட்காட்டியையே உதிர்த்துவிட்ட மமதையோடு நம் வீட்டு மதிற்சுவர் சிரிக்கலாம்.

ஆனால் மடி நிறைய மலர்களை அள்ளிக் கொண்டு வைகறை நமக்காக மறுபடியும் மறுபடியும் வருகிறது.

குங்குமக்கன்னத்தில்குழிவிழச்சிரித்தபடி, ஒளி மீண்டும் உதயமாகிறது.

காலைப் பொழுது ஒவ்வொரு நாளும் கை குலுக்க வருகிறது. பயணங்கள் ஒரு போதும் முடிவதில்லை. பாதைகள் நீண்டு கொண்டு போகலாம்—ஆனால்பயணங்கள் ஒருபோதும் முடிவதில்லை.

பிறக்கும் போதே சிலர் பிரதமராகப் பிறக்கிறார்கள். இதில் பெருமைப்படுவதற்கு ஒன்றுமில்லை.

செருப்பு தைப்பவன் மகனாகப் பிறந்து சில பேர் சிம்மாசனங்களை ஆட்டி வைக்கிறார்களே அவர்கள்தான் சிறப்பானவர்கள்!

சிலருக்கு, அவர்களுடைய பயணத்திட்டத்தைக் கூட வல்லவர்கள் யாரோ வகுத்துக் கொடுக்கிறார்கள்.

பெட்டி படுக்கைகளைக் கட்டி வைக்கும் முன்னரே வீட்டு வாசலில் விமானம் வந்து நிற்கிறது.

சுயமுயற்சி இல்லாமலேயே அவர்களின் சொகுசுப் பயணம் தொடங்கி விடுகிறது.

சிலபேர் ஆற்றல் பொருந்திய அனுமனது தோளில் அமர்ந்து கொண்டு கண்ணிமைக்கும் நேரத்தில் கடலைத் தாண்டி விடுகிறார்கள்.

இன்னும் சில பேர் எந்தக் கப்பலிலாவது தன்னை ஏற்றிக் கொள்ள மாட்டார்களா என்று ஏங்கி அலைகிறார்கள்.

யாரோ ஒரு சிலர்தான் தன்னந் தனியே தண்ணீரில் குதித்து கடலின் அலைகளைக் கைகளால் கிழித்து உடலையே படகாக்கி, உணர்வையே துடுப்பாக்கி, கரையைத் தம் கைகளால் கட்டித் தழுவுகிறார்கள்!

அவர்கள்தான் யுகங்களை சிருஷ்டிப்பவர்கள். காலங்களின் கதாநாயகர்கள். சரித்திரங்களின் சமையல்காரர்கள்! அவர்களுக்கெல்லாம் 'உயர்த்தி' (lift) எதுவும் உடனிருப்பதில்லை. தங்களைத்தாங்களே உயர்த்துகிறவர்களாக அவர்கள் உயர்ந்து விடுகிறார்கள். அவர்களுடைய உயரத்தை எந்தக் குள்ள மனிதர்களின் கூட்டமும் குறைத்துவிட முடியாது.

கால்களுக்கு வலி எடுக்கும்போது அவர்கள் களைப்பாறுவதில்லை... உள்ளத்திற்கு வலி எடுக்கும்போதுதான் கொஞ்சம் உட்கார்ந்து கொள்கிறார்கள். ஓய்வுக்காக அவர்கள் உட்காருகிறார்களே அன்றி ஓய்ந்து போய் உட்காருவதில்லை.

ஓய்வுக்காக கொஞ்சம் உட்கார்ந்த போதுதான் அந்த உருதுக் கவிஞன் 'என் பயணத்தின் முடிவு' என்று எழுதியிருப்பான் போலிருக்கிறது.

"பயணங்கள் ஒருபோதும் முடிவதில்லை. பாதைகள் நீண்டு கொண்டு போகலாம். ஆனால் பயணங்கள் ஒருபோதும் முடிவதில்லை."

அந்தக் கவிதையை நான் எழுதியிருந்தால் அப்படி எழுதியிருக்க மாட்டேன். இப்படி எழுதியிருப்பேன்.

"என்னுடைய பயணத்தின் இன்றைய நிலவரம் இதுதான்:

மன்ஜில் (மாளிகை) தொலைவில் இருந்தது.
மன்ஜில் (மாளிகை) தொலைவிலேயே இருக்கிறது."

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Srilanka

கோத்ரெஜ் படைத்துள்ள சுகபோகத்தின் சிகரம் : மார்வல் லக்ஷரி சோப்




செழுமையான
க்ரீம்போன்ற நுரை
மற்றும் மனம் மயக்கும் நறுமணம்

Mudra : B : GS : 2704 TM

விலை ரூ.4.50(தல வரிகள் தனி)